

# நோய் பலவீனத்தை உண்டாக்கும்-



**ஆனால் ருசிமிக்க ஓவல்டின் மீண்டும் ஆரோக்யம் பெருக உதவும்!**

நோயும் ஜுரமும் உடம்பை பலவீனப் படுத்தும்போது, சுலபமாக ஜீரணித்து அதிகமான புஷ்டி தரும் உணவு அவசியம்.

பலவீனம் நீங்கி ஆரோக்யம் பெற "ஓவல்டின்" இணையற்ற உணவு-பானம் என்று உலக முழுவதிலுமுள்ள டாக்டர்களும், நர்ஸ்களும் சிபார்சு செய்கின்றனர். அது சாப்பிட ருசியானது சுலபமாக ஜீரணமாகும்; தவிர நிறைந்த புஷ்டியுள்ள உணவு ஆகையால் பலவீனமுள்ள உடலுக்கு அவசியமான போஷாக்கையளிக்கும்.

ஓவல்டினில் ஜீவசக்தியளிக்கும் குணமுள்ள பழுத்த பார்லி மால்டும், சுத்தமான பட்டுப்பாலும் விசேஷமாகத் தயாரித்த கோக்கோவும், இருப்பதுடன் மதிப்புவாய்ந்த இயற்கை பாஸ்பேட்டுகளும் விட்டமின்களும் சேர்ந்துள்ளன.

ஓவல்டின் என்ற பெயருள்ளது இது ஒன்றுதான். இது இணையற்ற ஒரு தனிவகையைச் சார்ந்தது.

# 'OVALTINE'

## ஓ வ ல் டி ன்

உலகில் மிகப் பிரசித்திபெற்ற உணவு பானம்.

வினியோகஸ்தர்கள்:— ரெஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிமிடெட்.,




OV.301.

# தீபாவளி வெளியீடு!







பக்ஷிராஜாவின்

# ஏழை படும் பாடு





லலிதா.. பத்மினி.. சாமா.. பாலையா. துரைராஜ்.. காளி N. ரத்னம்

டைரக்ஷன்
ராம்நாத்

**NARAVANAN Co**
*Release*





மலர் 10 இதழ் 13 | அக்டோபர் 29 | விக்ருதி ஐப்பசி 13




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



கர்ணாமிர்த கானங்கள்
நிறைந்த
மகத்தான புராணப் படம்..

# பாரிஜாதம்

முற்றிலும் புதிய அம்சங்கள் நிறைந்தது
ஏராளமான பொருட்செலவில்
லாவண்யா பிக்சர்ஸார்
தயாரித்தது
தீபாவளி அன்று
வெளி வருகிறது!





மலர் 10 **கல்கி** இதழ் 13

# என்ன சேதி?

## தவிர்க்கவேண்டும்

இன்று உலகப் பிரச்னைகளில் எல்லாம் ஒத்துழைத்து வரும் பிரிட்டனுக்கும் அமெரிக்காவுக்குங்கூடப் பல விஷயங்களில் அபிப்பிராய பேதம் இருக்கத்தான் செய்கிறது. எனினும் அந்த நாடுகள் மேற்படி அபிப்பிராய பேதம் வளர்ந்து முற்றுவதற்கு இடம் கொடுப்பதில்லை. அந்த அபிப்பிராய வேற்றுமை காரணமாகத் தங்களுடைய நல்லுறவுக்குக் குந்தகம் ஏற்படும்படியாக நடந்து கொள்வதில்லை. ஒரு விஷயத்தில் உள்ள அபிப்பிராய பேதம் மற்ற விஷயங்களில் உள்ள நல்லுறவைப் பாதிப்பது என்று ஏற்பட்டு விடுமாயின், பின்னர் இந்த உலகிலே தனி நபர்களோ தேசங்களோ ஒற்றுமையுடனும் நட்புடனும் இருப்பது என்பது முடியாத காரியம் ஆகிவிடும்.

இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் ஏற்பட்டுள்ள ஒப்பந்தத்தை எடுத்துக் கொள்வோம். இரு நாடுகளுக்கும் எத்தனையோ தகராறுகள் இருந்துங்கூட சில குறிப்பிட்ட விஷயங்களை ஒட்டி ஒப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. ஒப்பந்தம் ஏற்பட்டுள்ள விஷயம் அற்ப சொற்பமானது அல்ல. அதன் பயனாக இரு நாடுகளுக்கும் உள்ள மகத்தான பிரச்னை தீருவதற்கு வழி பிறந்திருக்கிறது. ஒரு பெரிய பிரச்னையைச் சமரசமாகத் தீர்க்க முடியும் என்றால் மற்றப் பிரச்னைகளையும் சமரசமாகத் தீர்ப்பது சாத்தியம்தான் என்று ஏற்படுகிறது. இந்த நிலைமையில் தகராறு முற்றுவதற்கான காரியங்களையும் பேச்சுகளையும் சர்க்கார் தலைவர்கள் தவிர்க்க வேண்டும். அவ்வாறு செய்ய முடியாவிட்டாலும் ஒப்பந்தம் ஏற்பட்டுள்ள விஷயங்களை ஒட்டியாவது நேர்மையுடன் நடந்துகொள்ள வேண்டாமா?

## பீரங்கிப் பிரயோகம்!

ஆனால், பாகிஸ்தான் தலைவர்கள் அவ்வாறு நடந்துகொள்ளவில்லை. ஐ. நா. காஷ்மீர் கமிஷன் மத்தியஸ்தர் சர் ஓவன் டிக்ஸன் தமது அறிக்கையை ஐக்கிய நாடுகள் சபையில் சமர்ப்பித்ததிலிருந்து பாகிஸ்தான் கட்டுக்கோப்பான முறையில் இந்தியாமீது பிரசார பீரங்கியைத் திருப்பியிருக்கிறது என்று பண்டித ஜவாஹர்லால் நேரு கூறியுள்ளார்.

இதற்கு ஒரு உதாரணம் போதுமானது. இந்தியாவிலுள்ள சகல ஜாதி மத சமூகத்தினருக்கும் அரசியல் திட்டத்தில் சம உரிமைகள் அளிக்கப்பட்டிருக்கின்றன. அதைக் குறிப்பாக இந்தியாவில் உள்ள முஸ்லிம்கள் உணர்ந்து வருகிறார்கள். எனவே இனி இந்தியாவில் மதத்தை அடிப்படையாகக் கொண்ட முஸ்லிம் லீகிற்கு இடமில்லை என்று பல இடங்களிலும் அதைக் கலைத்து விட்டார்கள். சென்னையில் முஸ்லிம் லீகிலிருந்து பெரும்பாலோர் வெளியேறி விட்டார்கள். எனினும் அது சென்னையில் மாத்திரம் இன்னும் தள்ளாடித் தடுமாறிக் கொண்டிருக்கிறது.

அப்படியிருக்க, சில தினங்களுக்கு முன் பாகிஸ்தான் பிரதம மந்திரி லியாகத் அலிகான் லாகூரில் பேசிய போது விசித்திரமான யோசனை கூறியிருக்கிறார். இந்தியாவில் முஸ்லிம்கள் மறுபடியும் லீகை உயிர்ப்பிக்க வேண்டும் என்று வற்புறுத்தியிருக்கிறார். இது மிகவும் விஷமத்தனமான கூற்று என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. ஜாதி. மத சமய பேதமின்றி சகலருக்கும் சம உரிமை அளிப்பதே குடியரசு இந்தியாவின் மகோன்னதமான இலட்சியம். இந்தியாவின் அரசியல் திட்டமும் அந்த இலட்சியத்துக்கு ஆக்கம் அளித்திருக்கிறது. அதன் பயனாக இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான முஸ்லிம்களுக்குத் தங்களுடைய எதிர்காலத்தில் மிகுந்த நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது. அப்படியிருக்க, இந்தியாவின் இன்றைய இன்னல்களுக்கு முக்கிய காரணமான முஸ்லிம் லீகை உயிர்ப்பிக்க வேண்டும் என்று பாகிஸ்தான் பிரதம மந்திரி லியாகத் அலிகான் கூறியுள்ள யோசனையினால் இந்தியாவில் உள்ள முஸ்லிம்களுக்கு என்னளவாவது பலன் ஏற்படுமா?

பாகிஸ்தானில் ஹிந்து மகாசபை ஸ்தாபிக்கப் படவேண்டும் என்று இந்தியாவிலுள்ள தலைவர்கள் சொன்னால் அதற்குப் பாகிஸ்தான் தலைவர்கள் இணங்குவார்களா? அது போலவே இருக்கிறது லியாகத் அலிகானின் கூற்றும்! இவ்வாறு ஒன்று கிடக்க ஒன்று செய்து வரும் பாகிஸ்தான் தலைவர்கள், அதே மூச்சில் இந்தியா — பாகிஸ்தான் நல்லுறவுக்குக் குந்தகமாக இருப்பது இந்தியாதான் என்று பிரசாரம் செய்து வருவது யாரை ஏய்க்கும் செப்பிடு வித்தையோ!

### மனம் குளிரும்

இன்று பாரத நாட்டைப் பரிதவிக்கச் செய்து வரும் பிரச்னைகளில் உணவுப் பிரச்னைதான் முதல் ஸ்தானம் வகிக்கிறது. எனவே அந்தப் பிரச்னையின் உக்ரம் தணிவதற்கான எந்தச் செய்தியும் மனமார வரவேற்கத் தக்கதாகும். உணவுப் பிரச்னை தீருவதற்கு நீர்ப் பாசனத் திட்டங்களைக் காட்டிலும் அரும் பெரும் சாதனம் வேறு எதுவும் இல்லை அல்லவா? எனினும் அந்தத் திட்டங்கள் ஏட்டுத் திட்டங்களாக இருந்தால் யாருக்கு என்ன பலன்? அத்தகைய திட்டங்களில் ஒன்று அமுலுக்கு வருகிறது என்றால் அது ஆயிரம் பதினாயிரம் மக்களின் வயிற்றில் பாலை வார்ப்பதாகும். திருநெல்வேலி ஜில்லாவில் மணிமுத்தாறு திட்டம் அமுலுக்கு வருவது பற்றிச் சில வாரங்களுக்கு முன் எழுதியிருந்தோம். நிலச்சுவான்தார்களின் ஒத்துழைப்பினால் மணிமுத்தாறு திட்டத்துக்குக் கதிமோட்சம் ஏற்பட்டதுபோல, சென்ற பல பல வருஷங்களாகத் தேங்கிக் கிடந்த அமராவதித் தேக்கத் திட்டத்துக்கும் இப்போது கதி மோட்சம் ஏற்பட்டிருக்கிறது. ஏட்டளவில் இருந்த அந்தத் திட்டத்தைச் சென்னை சர்க்கார் அமுலுக்குக் கொண்டுவரப் போகிறார்களாம். அதன் பலனாக உடுமலைப் பேட்டை, தாராபுரம் தாலுகாக்களில் உள்ள பதினையாயிரம் ஏக்கர் நிலங்களில் தானியங்கள் கொழிக்கும் என்று மராமத்து மந்திரி கனம் பக்தவத்சலம் மேற்படி தாலுகா நிலச்சுவான்தார்களின் மகாநாட்டில் அறிவித்திருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும். சென்னை சர்க்கார் அனுமதித்துள்ள பாசனத் திட்டங்களுக்காக அடுத்த ஐந்து வருஷங்களுக்குள் இந்தியா சர்க்கார் நூற்றேழு கோடி ரூபாய் கொடுக்க இசைந்திருக்கிறார்கள் என்ற நற்செய்தியை கனம் மந்திரி அந்த மகாநாட்டில் வெளியிட்டார். அந்தச் செய்தியைக் கேட்டுச் சென்னை மகாஜனங்களின் மனம் ஓரளவு குளிரும் என்பது நிச்சயம்.

# வாழ்வும் துறவும்


ஆதியில் சர் ஸ்டாபோர்ட் கிரிப்ஸ் தொழிற்கட்சியினால்
பகிஷ்கரிக்கப்பட்டுச் சர்ச்சிலின் மடியில் வந்து
விழுந்தார்....
..பிறகு ஸ்டாலினை மயக்கி
வசப்படுத்துவதற்காக மாஸ்கோவுக்குச்
சென்றார்....
..அதன் பின் இந்தியா
வந்து வந்து கிரிப்ஸ்
செய்த தந்திரமும்
மந்திரமும் பலிக்கவில்லை....
..மறுபடியும் தொழிற்கட்சியில் பொக்கிஷ மந்திரி பதவி
வகித்த கிரிப்ஸ் அரும் பெரும் காரியங்களைச் சாதித்துச்
செல்வாக்கு பெற்றார்
..கடைசியாக நோய்வாய்ப்பட்டுத்
தமது பதவியைத் துறந்து
இப்போது ஆஸ்பத்திரியில்
இருக்கிறார்.

ஆசியாவுக்காகப் "பசிபிக் திட்டம்" ஒன்றைத் தயாரித்துக் கொண்டிருக்கிறார் ட்ரூமன்.

"என்ன அப்பனே! பசி காதைப் பிய்க்கிறது. இதைத் தூக்குவதற்குக் கூட எனக்குப் பலம் இல்லையே!"

போர்த் தளவாடம்

ட்ரூமன்

ருஷ்யா உதவி பிரதம மந்திரி மாலடாவ் பிராக் நகரில் கம்யூனிஸ்டு நாடுகள் மகாநாட்டைக் கூட்டினார்.. மேற்படி மகாநாட்டில் எல்லாத் தீர்மானங்களும் ஏக மனதாக நிறைவேறியிருக்கும் என்பது நிச்சயம்!

மேற்கு ஜெர்மனி மறுபடியும் ஆயுதங்களைப் பெருக்கிக் கொள்ளப் போகிறது.. அப்படியானால் மேற்கு [illegible]யர்கள் எந்த ராணுவ உடையைத் தேர்ந்தெடுக்கப் போகிறார்களோ!

மைசூரில் ராஜாஜி உணவு உற்பத்தி ஆராய்ச்சிக் கழகத்தைத் திறந்து வைத்தார்.. அத்தகைய கழகத்துக்கு மைசூரைக் காட்டிலும் தகுதியான இடம் இல்லை என்பது தெரியவில்லையா?

மகாராஜா

# 'இரும்புத் திரையை விலக்குவோம்'
# 'இருள் மண்டலத்தை அகற்றுவோம்'

விஞ்ஞானச் சக்கரம் ஈடு இணையற்ற வேகத்துடன் சுழன்றுவருகிறது. நேற்றைய அற்புத ஆராய்ச்சி இன்று சர்வ சாதாரண விஷயம் ஆகிவிடுகின்றது. இன்றையப் புதுமை நாளை பழமையாகி விடுகின்றது.

அணு குண்டு உலகத்தையே அழிக்கக் கூடிய மகா பயங்கரமான புதிய ஆயுதம் என்று சொல்லி வந்தார்கள். ஆனால், சென்ற சில மாதங்களுக்குள் அது பழமையாகிவிட்டது.

பிறகு ஹைட்ரஜன் அதாவது ஜல வாயு குண்டு கண்டு பிடிக்கப்பட்டிருப்பதாக அறிவித்தார்கள். அணு குண்டைக் காட்டிலும் ஹைட்ரஜன் குண்டு ஆயிரம் மடங்கு அதிக சக்தி பொருந்தியது என்று சொல்லி உலக மக்கள் நடுங்கும்படி செய்தார்கள்.

அதி பயங்கரமான ஆயுத வகைகளில் இதுவரை ஹைட்ரஜன் குண்டே அக்ர ஸ்தானம் வகித்து வந்தது. ஜனனம் ஏற்படுவதற்கு முன்பே ஹைட்ரஜன் குண்டு அவ்வளவு பிராபல்யத்தை அடைந்து விட்டது!

ஆனால் இப்போது அதன் 'புகழும்' மங்கி மறையும் காலம் வந்திருக்கிறது!

அணு குண்டும் ஹைட்ரஜன் குண்டும் துருப்பிடித்த கர்நாடக ஆயுதங்களாகிவிட்டன என்று விஞ்ஞான நிபுணர்களே ஒப்புக்கொண்டு விட்டார்கள்!

கானடா தேசத்தின் இராணுவத்தில் மேஜர் ஜெனரலாக இருந்தவரும் சர்வதேச ஆரோக்கிய ஸ்தாபனத்தின் டைரக்டர் ஜெனரலுமான டாக்டர் சிஷோல்ம் கூறுவதைக் கேளுங்கள்.

"விஞ்ஞானத்தின் மூலம் சிருஷ்டிக்கப்படும் நோய்க் கிருமிகள் அணு குண்டுகளைக் காட்டிலும் அதிக பயங்கரமான ஆயுதங்கள் ஆகும். மேற்படி கிருமிகள் எந்தப் பிரதேசத்தில் பிரயோகிக்கப் படுகின்றனவோ, அங்குள்ள ஜனங்களில் பாதிப் பேருக்கு மேல் உடனே அழிந்து விடுவார்கள் என்பது சர்வ நிச்சயம்."

லண்டனில் நடந்த விஞ்ஞான மேதாவிகளும் வைத்திய நிபுணர்களும் அடங்கிய கூட்டத்தில் டாக்டர் சிஷோல்ம் அவ்வாறு கூறினார்.

எனவே, அணு குண்டைக் கண்டு நடு நடுங்கிய உலக மக்கள் அதைக் காட்டிலும் பன் மடங்கு கொடிய நோய்க் கிருமிகளைக் கண்டு என்ன செய்யப் போகிறார்களோ!

* * *

இத்தகைய கொடும் பாதகமான ஆயுத வகைகளிடமிருந்து உலக மக்கள் உய்வதற்கு ஒரே ஒரு வழியைத் தவிர வேறு எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை.

உலக நாடுகள் ஏகோபித்து அத்தகைய கொடிய ஆயுதங்களைப் பகிஷ்கரிப்பதுதான் அந்த வழியாகும்.

ஜெர்மனியின் ஆயுத பலத்தை ஒடுக்கி அதனிடமிருந்து உலகத்தைக் காப்பாற்றுவதற்காகப் பிரிட்டனும் அமெரிக்காவும் சென்ற மகா யுத்தத்தில் பாடுபட்டன. ஆனால் இப்போது தங்கள் ஆதிக்கத்தில் உள்ள மேற்கு ஜெர்மனியை மீண்டும் ஆயுத வல்லமை பொருந்தியதாகச் செய்ய அதே வல்லரசுகள் முயற்சிக்கின்றன!

அணுகுண்டு இரகசியத்தை அறிந்த விஞ்ஞான நிபுணர்கள் அடிக்கடி மாயமாய் மறைந்து ருஷ்யாவுக்குப் போவதாகச் செய்திகள் கூறுகின்றன.

எனவே, அமெரிக்கா அணு குண்டுகளைத் தயாரித்தால் மற்றொரு நாடு ஹைட்ரஜன் குண்டுகளைத் தயாரிக்கலாம்; வேறொரு தேசம் நோய்க் கிருமிகளைச் சிருஷ்டி செய்யலாம்.

அந்த நாடுகள் எல்லாம் மேற்படி ஆயுத வகைகளை உலகத்தின் மீது பரீட்சை செய்து பார்க்க முற்படுமாயின் உலக ஜனங்களின் நிலைமை என்ன ஆவது? மானிட வர்க்கத்தின் கதி என்ன ஆவது?

எனினும் அத்தகைய ஆயுதவகைகளைப் பகிஷ்கரிக்கத் தயார் என்று ஒரு மாபெரும் வல்லரசின் பிரதிநிதி உறுதி கூற முன் வந்திருப்பது, கலங்கி நிற்கும் உலகத்துக்கு ஓரளவு நம்பிக்கையைக் கொடுக்கக் கூடிய விஷயம்தான்.

ருஷ்யா வெளி நாட்டு மந்திரி ஸ்ரீ விஷின்ஸ்கி ஐ. நா. சபைக் கமிட்டியில் அவ்விதம் உறுதி கூறியிருக்கிறார்.

கொரியாவில் ருஷ்யா செய்த பெருந் தவறு கொரியா மக்களுக்கே பேராபத்தாக முடிந்திருக்கிறது.

தென் கொரியா மீது போர் தொடுக்கும்படி வட கொரியாவை ருஷ்யா தூண்டியிராவிடில் கொரியாவில் யுத்தம் ஏற்பட்டிராது.

தற்போது கொரியாவில் யுத்தத்தை நீடித்து வரும் அமெரிக்கா செய்வது சரி என்று உலக அபிப்பிராயம் திரண்டு உருவாகும்படியான நிலைமையை ருஷ்யா உண்டுபண்ணி விட்டது.

எனவே, ருஷ்யப் பிரதிநிதியின் பேச்சும் செய்கையும் ஒரே விதமாக இருக்கும் பட்சத்தில், கொரியாவின் நிலைமை இவ்வளவு மோசமாகியிராது.

இருந்தாலும் தற்போது ருஷ்யப் பிரதிநிதி கூறும் வார்த்தைக்கு அமெரிக்கா, பிரிட்டன் முதலிய வல்லரசுகள் செவிசாய்க்குமாயின், மகா யுத்தமாகிற படு பாதாளத்துக்குச் சென்று கொண்டிருக்கும் உலகத்தைக் காப்பாற்றுவது ஒருவேளை சாத்தியமாகலாம்.

இல்லையேல், ருஷ்யாவின் உண்மை ரூபமாவது வெளியாக வழி பிறக்கும்.

"ருஷ்யாவில் இரும்புத் திரை போடப்பட்டிருக்கிறது; இருள் சூழ்ந்து நிற்கிறது; அங்கு நடப்பது என்ன என்பதே தெரியவில்லை என்றெல்லாம் சொல்லுகிறார்கள். அணு சக்தியைக் கட்டுப் படுத்தும் விஷயமாக ருஷ்யா வகுத்துள்ள திட்டத்துக்கு இணங்கினால் இரும்புத் திரையை விலக்கிவிடுவோம். இருள் மண்டலத்தையும் அகற்றிவிடுவோம். ஒரு குண்டுக்குப் பதில் மற்றொரு குண்டு பிரயோகிக்கப் படுமானால், உலகப் பிரச்னையைக் குண்டுகளால் தீர்க்க முடியாது" என்று விஷின்ஸ்கி கூறியுள்ளார்.

அமெரிக்கா அணுகுண்டைப் பிரயோகம் செய்தால் ருஷ்யாவும் அதைப் பிரயோகம் செய்யத் தயங்காது என்பது விஷின்ஸ்கியின் பேச்சில் தொனிக்கிறது அல்லவா?

எனவே, ருஷ்யாவின் திட்டத்தை அனுசரித்து அணுசக்தியை கட்டுப் படுத்துவதன் மூலம் அணுகுண்டு ஆபத்திலிருந்து உலக நாடுகளைக் காப்பாற்ற வழி பிறக்கலாம்.

அவ்வாறு கட்டுப்படுத்தி விட்டால், அணுகுண்டு உற்பத்தியாகிறதா என்பதைப் பரிசோதனை செய்து பார்ப்பதற்காக எந்தச் சமயத்திலும் எந்த நாட்டிலும் பிரவேசிக்க சர்வதேசக் கமிஷனுக்கு அதிகாரம் உண்டு என்றும் விஷின்ஸ்கி ஒத்துக் கொண்டுள்ளார்.

1. அணுகுண்டு ஆயுதங்களை முதலாவதாக உபயோகிக்கும் நாட்டை யுத்தக் குற்றவாளியாகக் கருதி அதற்குத் தண்டனை விதிக்க வேண்டும்.

2. அணுசக்தி ஆயுதங்களை அறவே ஒழித்து விடவேண்டும். அணுசக்தியைக் கட்டுப்படுத்த வேண்டும்.

3. உலக அமைதியைப் பலப்படுத்துவதற்காக வல்லரசுகளிடையே ஒப்பந்தம் ஏற்பட வேண்டும்.

4. 1950-ம் வருஷத்தில் வல்லரசுகள் தங்களுடைய யுத்த தளவாடங்களை மூன்றில் ஒரு மடங்கு குறைத்துக் கொண்டு விடவேண்டும்.

இவைதான் ருஷ்யாவின் திட்டத்தில் உள்ள முக்கிய அம்சங்கள் ஆகும்.

மேற்படி திட்டம் ஏட்டளவில் நின்று விடாமல் செயலுக்கு வருமாயின் அது உலக அமைதிக்கு அங்குரார்ப்பணமாக அமையலாம்.

உலக மகாயுத்தத்தைத் தவிர்க்க வேண்டும்; உலகில் அமைதியும் சமாதானமும் நிலவ வேண்டும்; இவைதான் தங்களுடைய லட்சியம் என்று பறைசாற்றி வரும் அமெரிக்கா முதலிய வல்லரசுகளுக்கு ருஷ்யாவின் திட்டத்தை அங்கீகரிப்பதில் என்ன ஆட்சேபனை இருக்க முடியும்?

ஐக்கிய நாடுகள் சபையில் பாரத தேசத்தின் நிரந்தரப் பிரதிநிதியாக இருக்கும் ஸ்ரீ பி. என். ராவ் சென்ற வாரம் நியூயார்க்கில் பேசியபோது சில புள்ளி விவரங்களை வெளியிட்டார்.

"பசியையும் பிணியையும் காட்டிலும் உலகத்தின் பயங்கர விரோதிகள் வேறு யாரும் இல்லை. உலகத்தின் தொல்லைகளுக்கெல்லாம் அவை தான் மூல காரணம். சென்ற மகாயுத்தத்துக்காக அமெரிக்கர்கள் ஒரு லட்சத்து முப்பதாயிரம் கோடி டாலர் செலவழித்தார்கள். ஒவ்வொரு வருஷமும் அந்தத் தொகையின் நூறில் ஒரு பாகம் உலக மக்களுக்குக் கிடைக்குமாயின் அவர்களின் வாழ்க்கை அந்தஸ்து உயர்ந்து உலகம் சுபிட்சம் அடையும். ஒரே ஒரு அணுகுண்டை உற்பத்தி செய்வதற்கு ஏற்படும் செலவைக் காட்டிலும், உலக சமாதானத்துக்காகப் பாடுபடும் ஐக்கிய நாடுகள் மகாசபையின் ஒரு வருஷச் செலவு எவ்வளவோ குறைவு என்பதைக் கவனிப்பவர்கள் திகைப்படையாமல் இருக்க முடியாது' என்று ஸ்ரீ பி. என். ராவ் கூறினார்.

எனவே, யுத்தச் செலவும் ஆயுத உற்பத்திச் செலவும் எவ்வளவு பாதகமானது என்பது தெரியவில்லையா?

# திருப்பதியில் ராஜாஜி



சென்ற 20-ம் தேதி திருப்பதிக்கு ராஜாஜி விஜயம் செய்து ஸ்ரீ வெங்கடேச பெருமாளைத் தரிசித்து நந்தவனப் பிரதிஷ்டை செய்தார்.

# அக்கப் போர்

கடந்த சில வருஷங்களில் மற்ற விஷயங்களை விட உணவைப் பற்றி நாங்கள் அதிகம் பேசி விட்டோம். இனி உணவு சுயதேவைப் பூர்த்திக்குத் துரிதமாகச் செயலில் முனையவேண்டும்.

மத்திய சர்க்கார் உணவு இலாகா அறிக்கை

இதைக்கூடத் தேவைக்கு அதிகமாகவே பல தடவை சொல்லியாகி விட்டது!

★

மைசூரில் மத்திய உணவு டெக்னலாஜிகல் ஆராய்ச்சி ஸ்தாபனத்தைத் திறந்து வைத்து விட்டு, ராஜாஜி மறு நாள், ஸ்ரீ ராமகிருஷ்ண மாணவர் இல்லத்தைத் திறந்து வைப்பார். பிறகு பெங்களூருக்கு வந்து மின்சார ரசாயனத் தொழிற்சாலையைத் திறந்து வைப்பார். அப்புறம் பெங்களூர் அசெம்பிளியில் மகாத்மாவின் உருவப்படத்தைத் திறந்து வைப்பார்.

—மைசூர்ச் செய்தி.

மைசூர்க்காரர்கள் அதிர்ஷ்டக்காரர்கள். திறந்தவாய் மூடாமல் ராஜாஜியின் திறப்பு விழாப் பிரசங்கங்களைக் கேட்டிருப்பார்கள்.

★

"மணிப்பூர் சமஸ்தானத்தில் காலடி வைக்க சோஷலிஸ்டுகளுக்குத் தடை விதிக்கப்பட்டிருக்கிறது."

—செய்தி.

சோஷலிஸ்டுகள் மணிப்பூரில் சாதாரணமாகக் காலடி எடுத்து வைக்காமல், மணிப்பூர் நடனம், கதகளி, பரதநாட்டியம் கற்றுக் கொண்டு தக்க பக்க வாத்தியங்களுடன் சமஸ்தானத்திலே நுழைந்து பார்ப்பார்களாக!



"நான் எழுதிக் கொடுக்கும் கதைகளை இனிமேல் பத்திரிகாசிரியர் குப்பைக் கூடையில் போட முடியாது!"

"ஏன்? நன்றாக எழுத ஆரம்பித்து விட்டாயோ?"

"இல்லை. அவர் குப்பைக் கூடையை அடித்துக் கொண்டு வந்து விட்டேன்!"

"சினிமாக் காட்சிகளை காலரையணா சீட்டிலிருந்து பார்த்தால் கண்கள் எவ்விதத்திலும் பாதிக்கப்படுவதில்லை என்பது பிரபல பிரிட்டிஷ் கண் வைத்திய நிபுணரால் கண்டு பிடிக்கப் பட்டது."

—செய்தி

இனி மேல் காலரையணா சீட்டின் கட்டணம் உயர்ந்து விடும் என்று எதிர்பார்க்கலாம்.

★

"ஆசிய மக்களுக்கான மார்ஷல் திட்டம் ஒன்றை ட்ருமன் வகுக்க வேண்டுமென்று மக்ஆர்தர் அபிப்பிராயப்படுகிறாராம்."

—நியூயார்க் செய்தி.

மக்ஆர்தர் ஆசிய மக்களுக்காக நிஜமாகவே பரிந்து பேசுகிறாரா, அல்லது ஆசியமாக ஏதாவது சொல்ல வேண்டுமே என்பதற்காக இப்படிச் சொல்லுகிறாரா!

★

"சூரத்தில் சைக்கிள் திருடி வரும் ஒரு கோஷ்டியாரைப் போலீஸார் தேடி வருகிறார்கள்."

—சூரத் செய்தி.

போலீஸார் தங்கள் சூரத்தைக் காட்டும் சந்தர்ப்பத்தை நன்றாகப் பயன் படுத்திக் கொள்ளுவார்களா!

★

"அதிக விலைக்கு நூலை விற்றவர் பிடிபட்டார்."

—சென்னைச் செய்தி.

நூல் கட்டுப்பாடு தானே, லாபமாக அறுத்தெறிந்து விடலாம் என்று அவர் நினைத்தது தவறாகப் போய்விட்டது போலும்!

★

"வீடு கட்டிக்கொள்ள விரும்பும் ஹரிஜனங்களுக்கு முதல் சலுகை தரப்படும்."

—ஒரு பஞ்சாப் மந்திரி

வீடு கட்டிக்கொள்ளுவதற்கு முதல் சலுகை தருவதைவிட முதல் தருவதை ஹரிஜனங்கள் பெரிதும் வரவேற்பார்கள் என நம்புகிறோம்.

★

"புதுடெல்லியில் புதிதாகத் திறக்கப்பட்டிருக்கும் சத்தியமூர்த்தி மண்டபத்தில் நாடகங்களும் சங்கீதக் கச்சேரிகளும் நடைபெறும்."

— புது டெல்லிச் செய்தி.

இடை இடையே பேச்சுக் கச்சேரிகளுக்கும் அந்த மண்டபத்தில் இடம் கிடைத்தால்தான் அந்த மண்டபம் முழுக்க முழுக்க 'சத்தியமூர்த்தி மண்டபம்' ஆகும்.

★

"ஸதாரா ஜில்லா கமிஷனர் மக்களுக்குப் பால் கிடைக்க வேண்டுமென்பதற்காக ஹோட்டல்கள் மத்தியானம் 12 மணியிலிருந்து 4 மணி வரை டீ விற்கக் கூடாது என்று உத்தரவு பிறப்பித்திருக்கிறார்."

—செய்தி.

பிறகு, மக்களுக்குக் குடிக்கத் தண்ணீர் கிடைக்க வேண்டும் என்பதற்காகப் பால் விற்கக்கூடாது என்றும் உத்தரவு பிறப்பிக்கலாம்.

# ஸ்ரீராமகிருஷ்ண உபநிஷதம்

சக்ரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

## 33. ஐயப்பட வேண்டாம்!

"சுபாவத்தை எப்படி நான் வெல்ல முடியும் என்று பயப்படாதே. கன்னங்கரேல் என்றிருக்கும் கரியை நெருப்பு தீண்டியதும் அது என்னவாகிறது? அதன் சுபாவமான கறுப்பு தீர்ந்து போகிறது. அவ்வாறே உன்னுடைய சுபாவமும் ஞானத் தீ பட்டதும் உள்ளத்தின் கறுப்பு தீர்ந்து போகிறது!"

உள்ளத்தை சுவாதீனத்தில் வைத்துக்கொண்டு அதில் அழுக்குச் சேராமல் வைத்துக்கொண்டால் எதையும் செய்ய முடியும்.

வண்ணான் வீட்டிலிருந்து வந்த புதுத் துணிக்கு எந்தச் சாயமும் ஏற்றிவிடமுடியும். அந்தத் துணியைப் போன்றதுதான் மனமும். நல்ல சகவாசமும் முயற்சியும் இருந்தால் அதை நல் வழிக்குத் திருப்பலாம். ஆங்கிலம் படித்தவர்களுடைய பேச்சைப் பாருங்கள். ஆங்கில மொழிகள் கலந்தே எப்போதும் பேசுவார்கள். சமஸ்கிருதம் படித்தவர்கள் எப்போதும் சுலோகங்களை மேற்கோள்களாக எடுத்துக் காட்டியே பேசுவார்கள். சத்சங்கத்திலிருப்பவர்களுடைய மனம் கோணல் வழிகளில் செல்லாது. கெட்ட சகவாசத்தில் இருப்பவர்களுடைய சிந்தனை எப்போதும் கெட்ட விஷயங்களில் செல்லும். துணியில் சாயம் ஏறுவது போல் மக்கள் உள்ளங்கள் சகவாசகுணத்தை ஏற்றுக் கொண்டு விடும். சகவாசம் நல்லதாயிருந்தால் நல்ல குணம் உண்டாகும். சகவாசம் தோஷங்கள் கொண்டதாக இருந்தால் கெட்ட சுபாவம் வளரும்.

* * *

தன்னைத்தான் மோசம் செய்து கொள்ளக்கூடாது. உன் உள்ளத்தை நீ மோசம் செய்யப் பார்த்தால் உனக்கே நஷ்டம். உண்மையும் பக்தியும் தெய்வத்தை அடையும் வழி. ஆண்டவனை மறந்தால் மாண்டு போவாய். பக்தி இல்லையேல் வாழ்க்கை இல்லை.

ஞானம் வேறு பக்தி வேறு அல்ல. பக்தியும் உண்மையும் கலந்தால் ஞானம்.

* * *

பிறரைக் கொல்ல வேண்டுமானால் கத்தியும் துப்பாக்கியும் வேண்டும். தற்கொலைக்கு ஒரு ஊசியும் போதும். அதைப் போலவே பிறருடைய அஞ்ஞானத்தைப் போக்கி ஞானம் ஊட்ட வேண்டுமானால் பல்வேறு சாஸ்திரங்கள் ஓத வேண்டும். தன் உள்ளம் ஒளி பெறுவதற்கு ஒரு சின்னஞ்சிறு மந்திரம் போதும். ஆனால் பக்தியிருக்கவேண்டும்.

பக்தியே எல்லாச் சமயங்களுக்கும் வேர். பக்தியிருந்தால் அவனவன் சமயமும் ஆசாரமும் அவனவனுக்குப் போதும். பக்தியில்லாத ஒருவன் எத்தனை அறிவு பெற்றாலும், சமயம் மாறினாலும் ஞானம் அடைய மாட்டான்.

* * *

இதைத் தின்னும் அதைத் தின்னாது என்று வைத்த உணவை மோந்து பார்த்துத் தள்ளும் பசு என்ன பால் கறக்கும்? எதை வைத்தாலும் ஆவலோடு தின்று விடுகின்ற பசுவோ மடி நிறைந்து வேண்டிய பால் தரும்.

ஐயம் குடி கொண்ட மூளையில் ஞானப்பால் சுரக்காது.

* * *

தாகம் அதிகரித்தபோது ஒருவன் ஆற்று நீரில் ரொம்ப மண் கலந்திருக்கிறது என்று தாகத்தைத் தீர்த்துக் கொள்ளாமலிருக்கமாட்டான். இந்த ஜலத்தில் மண் கலந்திருக்கிறது என்று நல்ல சுத்தமான தண்ணீருக்காகக் கிணறு வெட்ட ஆரம்பிக்க மாட்டான். தாகத்தைப் போன்றதுதான் ஆண்டவன் அருளைப் பெறும் ஆசையும். அருகில் இருக்கும் சமயத்தை, சேறு கலந்திருக்கிறது என்று தள்ளி விட்டு அதில் தாகம் தவிர்த்துக் கொள்ளாமல் வேறு மதங்களைத் தேடிப் போகமாட்டான். தனக்

காக ஒரு புது மதமும் உண்டாக்க முயற்சி செய்ய மாட்டான். உண்மையான வேட்கை ஏற்பட்டிருப்பின் தான் பிறந்த சமயத்தைக் கொண்டே தாகம் தீர்த்துக் கொள்ளுவான். புது மதம் உண்டாக்கிக் கொள்வதற்கு வேண்டிய கற்பனைக்கும் யோசனைக்கும் அவனுக்கு ஏது அவகாசம்?

லோபி ஒருவன் பணத்துக்கு ஆசைப்படுவதுபோல் பக்தன் ஆண்டவனை விரும்புகிறான். குளத்தில் விழுந்து முழுகிப்போய் இறக்கும் தறுவாயில் ஒருவன் சுவாசத்துக்காக எப்படித் தத்தளிக்கிறானோ அப்படி ஆண்டவனைக் காண பக்தன் தத்தளிப்பான்.

* * *

“குருட்டு பக்தி என்று ஏளனமாகச் சிலர் பேசுவதைக் கேட்டிருக்கிறீர்கள். இது எனக்கு விளங்கவே இல்லை” என்கிறார் ஸ்ரீ ராமகிருஷ்ணர். “குருட்டு பக்தி என்றால் என்ன? குருட்டு பக்தி என்றும் கண்ணுள்ள பக்தி என்றும் இரண்டு வித பக்தி கிடையாது. அறிவு என்றும் பக்தி என்றும் உண்டு. ஆனால் பக்தியில் குருட்டு பக்தி என்ற ஒரு தகாத பக்தி கிடையாது. பக்திக்குக் கண்கள் இல்லை. எல்லாவித பக்தியுமே குருட்டு.”

• • •

ஆண்டவனை நீக்கி விட்டு வாழ்க்கை நடத்தும் மக்கள் பெருந் துன்பத்துக்கு ஆளாகிறார்கள். ஐயத்தை நீக்கிவிட்டு பக்தி செய்யுங்கள். சூன்யத்திலிருந்து இந்த அற்புத பிரபஞ்சம் தானாக உண்டாகவில்லை. மனிதனுடைய சேதனமும் சிந்தனையும் வெறும் சூன்யத்திலிருந்து தோன்ற முடியுமா? பரம் பொருளைப் பற்றி ஐயப்பட வேண்டாம்.

* * *

“நரகம் நரகம் என்று பயப்படாதேயுங்கள். ஆண்டவனைத் தியானித்து செய்யத் தகாத பல காரியங்களைச் செய்து விட்டேன். செய்ய வேண்டியதைச் செய்யாமலும் விட்டேன். அப்பனே! என்னைக் காப்பாயாக! என்று வேண்டிக் கொள்ளுங்கள். பாவங்கள் அனைத்தும் ஓட்டமாக ஓடி மறையும்” என்கிறார் பகவான் ராமகிருஷ்ண பரமஹம்ஸர்.

# அன்பு வலை

**வி. எஸ். ஆர்.**

தீபாவளிக்கு இன்னும் நான்கு தினங்களே இருந்தன. எப்பொழுதும் தீபாவளியைச் சந்தோஷத்துடன் வரவேற்பார் நடேச ஐயர். அவர் மனைவியும் ஒரே புத்திரியான லலிதாவையும் தவிர வீட்டில் வேறு யாருமில்லை. அவர் சாமான்களை வாங்கி விற்கும் தரகர். வியாபாரத்தில் ஏராளமான கமிஷன் வந்து கொண்டு இருந்தது. மிகவும் வசதியுள்ள நடேச ஐயர் தீபாவளியைக் குதூகலமாகக் கொண்டாடுவதில் என்ன ஆச்சரியம்!

அந்த வருஷம் சித்திரை மாதத்தில் லலிதாவின் கல்யாணத்தைச் சிறப்பாக நடத்தினார். தமது செயலுக்கு மீறிக்கூடச் செலவு செய்தார் என்று சொல்லலாம்.

அவரது மாப்பிள்ளை ஸௌராஜன் சென்னையில் டாக்டராக இருந்தான். அவனுக்கு நல்ல வருமானம் வந்துகொண்டு இருந்தது. நல்ல மாப்பிள்ளை கிடைத்த சந்தோஷத்தில் கையில் இருந்த பணத்துடன் அங்குமிங்கும் கடன் வாங்கிக்கூடப் பிரமாதமாகச் சீர்வகைகள் செய்தார் நடேச ஐயர்.

இதற்குப் பிறகு அவரது வியாபாரத்தில் எதிர்பாராத சில ஏமாற்றங்கள் ஏற்பட்டன. திடீரென்று வருமானம் குறைந்து கடன்காரர்களுக்குப் பணத்தைத் திருப்பிக் கொடுக்க முடியவில்லை. கௌரவமான மனிதரான நடேச ஐயருக்கு ஏற்பட்ட மனவேதனை இவ்வளவு அவ்வளவு அல்ல. மாதம் ஒவ்வொன்றாகக் கடந்து புரட்டாசியும் வந்தது. ஐப்பசி பிறந்தால் தீபாவளி வந்துவிடுமே என்ன செய்வது! என்று எண்ணிக் கலங்கினார் நடேச ஐயர். குறைந்தது ஐந்நூறு ரூபாயாவது இருந்தால்தான் தீபாவளியை ஓட்டமுடியுமென்பது அவருக்குத் தெரியும்.

கல்யாணத்துக்கு வாங்கின கடனையே இன்னும் கொடுத்தபாடில்லை. அவரை நம்பி மேலும் யார் கடன் கொடுப்பார்கள்! ஆனால் தீபாவளிக்குள் ஏதாவது பணம் கைக்கு வராதா என்றெல்லாம் அவர் எண்ணினார்.

நாட்கள் ஓடிக்கொண்டிருந்தன. ஆனால் பணம் வந்தபாடில்லை. வாழ்க்கையில், அது வரை அனுபவித்திராத ஒரு வேதனை அவரைப் பற்றிக் கொண்டது. அவரது மனைவி அன்னம்மாளின் நகைகளெல்லாம், ஏற்கெனவே அடகு வைக்கப்பட்டன. அவளது தங்கச் சங்கிலி ஒன்றுமட்டும் அவள் கழுத்தில் இருந்தது. துக்கத்தினால் பீடிக்கப்பட்டவராய் உட்கார்ந்து கொண்டிருந்த நடேச ஐயரின் கண்களில் அது பட்டதும் 'இந்தச் சங்கிலியை விற்றுவிட்டால் நிலைமையைச் சமாளித்து விடலாமே' என்று எண்ணினார் ஒரு கணம். 'சே! சே! இதையும் விற்றுவிட்டு நாளும் கிழமையுமாக எப்படிப் பாழும் கழுத்துடன் இருப்பாள்!' என்ற எண்ணம் சட்டென்று தோன்றியது. லலிதாவின் நகைகளைத் தொட அவருக்கு எள்ளளவும் உரிமையில்லை. அவை மாப்பிள்ளையைச் சேர்ந்தவைதானே!

அன்று நடேச ஐயர் சாப்பிட்டுக் கையலம்பியதும் அன்னம் வெற்றிலைத் தட்டைக்கொண்டு எதிரில் வைத்தாள். நடேச ஐயர் அசுவாரஸ்யத்துடன் மென்று விழுங்கிய பொழுது, ''ஏன்னா! தீபாவளிக்கு இன்னும் நான்கு நாள்கூட இல்லையே! இந்தச் சங்கிலியை விற்று விட்டாவது தீபாவளியைக் கொண்டாடலாமல்லவா!'' என்றாள் அன்னம்மாள். அவள் முகத்தை ஏறிட்டுப் பார்த்தார் நடேச ஐயர். அவர் முகத்தில் தோன்றிய வருத்தத்தையும் ஏமாற்றத்தையும் மறைத்துக் கொள்ள அவர் பெரும் முயற்சி செய்வது நன்றாகத் தெரிந்தது.

''நாளும் கிழமையுமாகவா இப்படிச் செய்யச் சொல்லுகிறாய்!'' என்று கேட்டார் நடேச ஐயர் துக்கத்துடன்.

''நாளும் கிழமையுமாகக் குழந்தைக்கு [illegible] செய்யாமல் இருக்கவேண்டும். பணம் கிடைத்தால் நாளைக்கே வேறு சங்கிலி செய்து கொண்டால் போகிறது. ஆனால் தலை தீபாவளி திரும்பவும் வருமா!''

அன்னம் சொன்னது சரி என்று பட்டது நடேச ஐயருக்கு. நகையை அடகு வைத்து யாரிடமாவது பணம் வாங்கலாமா! என்று ஒரு கணம் யோசித்தார். அப்பொழுது அவரைத் தேடிக்கொண்டு வந்தார் முத்துசாமி. முத்துசாமி நல்ல ஐவேஜி உள்ள மனிதர். லேவாதேவியும் செய்வதுண்டு. கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்ததாக அவரை மதித்தார் நடேச ஐயர்.

அவர் முத்துசாமியை உட்காரச் சொல்லி விட்டு அவரருகில் சென்று அந்தரங்கமாக, ''ஸார்! எனக்கு ஐந்நூறு ரூபாய் அவசரமாக வேண்டி இருக்கிறது. ஒரு தங்கச் சங்கிலியை அடமானமாக வைத்துக் கொண்டு பணம் கொடுக்க முடியுமா!'' என்று கேட்டார்.

''சங்கிலி எதற்கு! இதற்குக்கூட உம்மை நம்பமாட்டேனா நான்! பேஷாக நான் உமக்குப் பணம் தருகிறேன்'' என்றார் முத்துசாமி.

இதைக் கேட்ட நடேச ஐயருக்கு மிகவும் ஆச்சரியமாக இருந்தது.

முத்துசாமி ஐயர் பண விவகாரங்களில் ரொம்பவும் கண்டிப்பான பேர்வழி என்பது நடேச ஐயருக்கு நன்றாகத் தெரியும். அப்படிப் பட்டவர் ஒரு பிராமிசரி நோட்டுக்கூட இல்லாமல் ரூபாய் ஐந்நூறு கேட்டவுடனே தருவதாகச் சொன்னது நடேச ஐயருக்கு மிகுந்த ஆச்சரியத்தையும் பிரமிப்பையும் அளித்தது. எப்படி இருந்தால் என்ன! இதைப்பற்றி எல்லாம் யோசனை செய்து கொண்டிருப்பதற்கு அதுவா நேரம்.........!

அவர் முத்துசாமியுடன் நேரே அவர் வீட்டுக்குப் போனார். பணத்தை வாங்கிக்கொண்டு

திரும்பினார். அவர் ஏதோ கொஞ்சம் ஆறுதலடைந்தபோதிலும் கடன் வாங்கிய பெரும் பாரம் அவர் மனதை அழுத்தியது. அன்றே தமது மனைவியையும் பெண்ணையும் அழைத்துக்கொண்டு போய் அவர்களுக்கு வேண்டிய துணிமணிகள், மாப்பிள்ளைக்குச் சட்டை, வேஷ்டி, அங்கவஸ்திரம் எல்லாவற்றையும் வாங்கிக் கொண்டு வந்தார்.

டாக்டர் சிவராஜன் தீபாவளிக்கு முதல் நாளே மாமனார் வீட்டுக்கு வந்து விட்டான். மாமனார் வாங்கி வைத்திருந்த துணிமணிகள் எல்லாம் அவனுக்கு மிகவும் திருப்தியையும் சந்தோஷத்தையும் அளித்தன.

அன்று சாயங்காலம் கடைத்தெருப் பக்கம் போன நடேச ஐயருக்கு எதிர்பாராத ஆச்சரியம் ஒன்று காத்திருந்தது. 'ராதும் அனுமினியம் ஸ்டோரு'க்குள் நுழைந்ததுமே அதன் மானேஜர், "மிஸ்டர் நடேச ஐயர் இந்தாருங்கள் உங்கள் கமிஷன்" என்று கூறி ஐந்நூறு ரூபாய்க்கு ஒரு செக்கை அவரிடம் நீட்டியதும் நடேச ஐயருக்கு ஒன்றுமே புரியவில்லை. கடனில்லாமல் தீபாவளியைக் கொண்டாட வேண்டியிருக்கிறதே என்று நினைத்தவருக்கு இந்தக் கமிஷன் பணம் ஒரு புதையலாய்ப் போயிருந்தது. தாங்க முடியாத சந்தோஷத்துடன் வீட்டுக்குத் திரும்பினார். உடனே அந்தப் பணத்தைக் கொண்டுபோய் முத்துசாமியிடம் கொடுத்துத் தமது கடனைத் தீர்த்துக் கொள்ளலாமல்லவா! எவ்விதமான பளுவுமின்றித் தீபாவளியைக் கொண்டாட முடியுமல்லவா!

இந்தச் சந்தோஷச்செய்தியை மனைவியிடம் ரகஸ்யமாய்த் தெரிவித்துவிட்டு முத்துசாமியின் வீட்டுக்குச் சென்றார். பணத்தைப் பெற்றுக்கொண்ட முத்துசாமி "இதற்கென்ன ஸார், அவசரம்! மெதுவாகக் கொடுப்பது தானே!" என்றார்.

"பரவாயில்லை. பணத்தைத் திருப்பிக் கொடுத்தால்தான் என்னால் தீபாவளியை நிம்மதியாகக் கொண்டாட முடியும்" என்று நடேச ஐயர் வற்புறுத்தவே முத்துசாமியும் உடனே பணத்தை வாங்கிக் கொண்டார்.

தீபாவளி மிகவும் சிறப்பாக நடந்தது. பெண் மாப்பிள்ளைக்குக் காப்பி எடுத்துக் கொண்டுபோய் கொடுப்பதைப் பார்த்த நடேச ஐயருக்கும் அன்னம்மாளுக்கும் அளவில்லாத பெருமையும் மகிழ்ச்சியும் ஏற்பட்டன. தீபாவளியன்று கங்கா ஸ்நானம் செய்துவிட்டு முத்துஸ்வாமியைப் பார்த்துவிட்டு வருவதற்காகச் சென்றார் நடேச ஐயர்.

அவர் வீட்டுக்குள் நுழையும்போது உள்ளே யாரோ பேசிக் கொண்டிருப்பதைக் கேட்டுத் தயங்கி நின்றார். உள்ளே பேசிக்கொண்டிருந்தது முத்துசாமியும் அவரது மாப்பிள்ளை சிவராஜனும்தான்.

"இந்தாருங்கள் டாக்டர், உங்கள் ஐந்நூறு ரூபாய். மணியார்டர் செலவு மிச்சப்பட்டது விசேஷம். நான்தான் பண உதவி செய்தேன் என்று இன்னும் உங்கள் மாமனார் நடேச ஐயர் எண்ணிக் கொண்டிருக்கிறார். உண்மையில் இந்தப் பணம் உங்களுடையதுதான் என்பது அவருக்கு இன்னமும் தெரியாது."

"என் மாமனார் எப்படிப்பட்டவர் என்று எனக்குத் தெரியாதா! தன் கஷ்டத்தை வாயை விட்டுச் சொல்லவிட மாட்டார். நீங்கள் அதைப்பற்றி எழுதாவிட்டால் எனக்கு ஒன்றுமே தெரிந்திருக்காது. நான் நேரில் அவருக்கோ லலிதாவுக்கோ பணம் அனுப்பினால் அவர்கள் ஒருநாளும் வாங்கிக் கொண்டிருந்திருக்க மாட்டார்கள். ஆகையால் தான் உங்களை உபயோகப் படுத்திக் கொண்டேன்."

"மாப்பிள்ளை என்றால் இப்படியல்லவா இருக்கவேண்டும்! இவ்வளவு சீக்கிரம் அவருக்



குப் பணம் கிடைத்துத் திருப்பிக் கொடுப்பார் என்று எதிர்பார்க்கவில்லை."

"நான் எதிர்பார்த்துக் கொண்டுதான் இருந்தேன். நான் ஊரிலிருந்து வந்ததும் அவர் முகத்தைப் பார்த்தேன். வேதனைப் பட்டுக் கொண்டிருந்தார். கடன் வாங்கித் தீபாவளி கொண்டாடுகிறோமே என்ற வேதனைதான் அவரை வாட்டி வருகிறது என்று தெரிந்து கொண்டேன். இந்த வேதனையுடன் அவர் சந்தோஷமாகத் தீபாவளி கொண்டாட முடியாது என்பது எனக்குத் தெரிந்து விட்டது. ஆகையால் 'ராஜா அலுமினியம் ஸ்டோருக்'குப் போய் வேண்டிய பாத்திரங்களை வாங்கிக் கொண்டு கமிஷனை என் மாமனாருக்கு அனுப்பச் சொன்னேன். என் மருமான் ஒருவன் ஊரில் வேலையில்லாமல் கஷ்டப்படுகிறான். ஒரு கடை வைத்துக் கொடுத்தால் அவனுக்கும் உதவி செய்ததுபோலவும் இருக்குமல்லவா! அந்தக் கமிஷன் வந்து உங்களிடம் கடனைத் திருப்பிக் கொடுத்ததும்தான் மாமனார் முகத்தைப் பார்க்க முடிந்தது."

"டாக்டர்! நீங்கள் சாமான்யமான ஆளில்லை. இந்தமாதிரி மாமனார் கஷ்டத்தை அறிந்து, அன்புடன் உதவிசெய்யும் மாப்பிள்ளைகளும் உலகத்தில் உண்டா! நடேச ஐயர் ரொம்பவும் கொடுத்து வைத்தவர்" என்று சொன்னார் முத்துசாமி.

இந்தச் சம்பாஷணையைக் கேட்ட நடேச ஐயருக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவருக்குக் கிடைத்த கடன் தொகை, கமிஷன் பணம் எல்லாம் மாப்பிள்ளையின் உதவியால் கிடைத்ததுதானா! மாப்பிள்ளை தன் ஏழ்மை நிலையை அறிந்து, மறைமுகமாக உதவி அளித்தது பற்றிப் பெருமையும் சந்தோஷமும் அவருக்கு ஏற்படாமல் இல்லை. ஆயினும் அந்தப் பெருமை, சந்தோஷம் எல்லாவற்றையும் மூழ்கடித்துக் கொண்டு தோன்றியது ஒரு வேதனை. மாப்பிள்ளையின் அன்புக்கு எதிராக நின்றது அவர் சுயகௌரவம். "நாமாவது! மாப்பிள்ளை அளித்த உதவியை ஏற்றுக் கொள்ளுவதாவது!" என்று நினைத்தார். கமிஷன் தொகை கிடைத்ததிலிருந்து அவர் மனதில் ஏற்பட்டிருந்த திருப்தி மாயமாய் மறைந்தது.

சிவராமன் முத்துசாமியின் வீட்டை விட்டு வெளியில் வந்ததும் தன் மாமனார் வழக்கமாக அணியும் பாதரட்சையை அங்கே பார்த்து விட்டான். தான் முத்துசாமியுடன் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டுவிட்டுப் போயிருப்பாரோ என்ற பயம் அவனுக்கு ஏற்பட்டது. வீட்டுக்கு வந்ததும் அவர் முகத்திலிருந்த அதிசய மாறுதலைப் பார்த்ததும் அவனுக்கு ஏற்பட்டிருந்த சந்தேகம் உறுதிப்பட்டது.

வாழ்க்கையில் சில நம்பமுடியாத சம்பவங்கள் ஏற்படத்தான் செய்கின்றன. நாம் நம்பவில்லை என்பதற்காக அவை நடைபெறாமல் இருப்பதில்லை. நடேச ஐயர் வாழ்க்கையில் ஒரு நாள் எதிர்பாராத சம்பவம் அன்று நடந்தது. உள்ளூர்க் குழந்தைகள் ஆஸ்பத்திரி கட்டிட நிதிக்காக நடந்த ஒரு லாட்டரியில் அவருக்கு முதல் பரிசு ரூபாய் இரண்டாயிரம் கிடைத்து விட்டதாக அன்று சாயங்காலம் அவருக்குத் தகவல் கிடைத்தது. தன்னைத் தேடிவந்த அதிர்ஷ்டத்தைக் குறித்து மட்டற்ற மகிழ்ச்சி கொண்டார் அவர். அவர் குடும்பத்தில் ஒவ்வொருவரும் ஆனந்தம் அடைந்தனர். பணம் கைக்கு வந்ததும் மாப்பிள்ளைமூலம் கிடைத்த கமிஷன் தொகை ரூபாய் ஐந்நூறையும் அவரிடம் திருப்பிக் கொடுக்க முடிவு செய்தார் நடேச ஐயர்.

நடேச ஐயர் பெட்டியைத் திறந்து அதிலிருந்த தாம் வாங்கிய லாட்டரி டிக்கட்டை எடுத்துப் பார்த்தார். அவருக்குத் தூக்கி வாரிப் போட்டது. ஏனெனில் தாம் வாங்கிய டிக்கட் நம்பருக்கும் பரிசுபெற்ற டிக்கட் நம்பரும் வேறாக இருந்தன! உடனே லாட்டரி ஆபீசுக்குப் போன் செய்து, பரிசு விழுந்தது தமக்குத்தானா என்று விசாரித்தார். அவருக்குத்தான் என்று சந்தேகத்துக்கு இடமில்லாமல் தெரிவித்ததுமின்றி, பரிசுத்தொகையைக் கூடிய சீக்கிரம் அனுப்பி வைப்பதாகவும் தெரிவித்தார்கள்.

நடேச ஐயருக்குப் பளிச்சென்று ஒரு சந்தேகம் எழுந்தது. 'விரு விரு'வென்று மாப்பிள்ளை டாக்டர் சிவராமனிடம் சென்றார். "மாப்பிள்ளை! நிஜத்தைச் சொல்லுங்கள்! நீங்கள்தான் இந்த பரிசுபெற்ற டிக்கட்டை என் பெயருக்கு வாங்கினீர்களா?" என்று மிகுந்த பரபரப்புடன் கேட்டார்.

சிவராமன் சிரித்துவிட்டு, "ஆமாம், மாமா! நான்தான் வாங்கினேன். பாவம், நீங்களும் தான் என் உதவியிலிருந்து தப்பிக்கொள்ள வேண்டும் என்று பார்க்கிறீர்கள். ஆனால் முடியவில்லை. நான் என்ன செய்யட்டும்! ஆஸ்பத்திரி கட்டிட சகாய லாட்டரியில் என் பெயருக்கு ஒரு டிக்கட், லலிதா பெயரில் ஒரு டிக்கட், உங்கள் பெயரில் ஒரு டிக்கட் ஆக மூன்று டிக்கட் வாங்கினேன். நீங்களும் உங்கள் பெயரில் ஒரு டிக்கட் வேறு வாங்கியிருக்கிறீர்கள். ஆனால் வேறு எந்த டிக்கட்டுக்கும் பரிசு விழாமல் உங்கள் பெயரில் நான் வாங்கின டிக்கட்டுக்குப் பரிசு கிடைத்திருக்கிறது. இதிலிருந்து என்மூலம்தான் உங்களுக்கு அதிர்ஷ்டம் அடிக்க வேண்டுமென்று ஏற்பட்டிருக்கிறது!" என்றான்.

இந்தப் பதிலைக் கேட்ட மற்றவர்கள் சந்தோஷப்பட்டபோதிலும் நடேச ஐயர் முகத்தில் ஈயாடவில்லை.

"மாப்பிள்ளை! என்ன இருந்தாலும் அந்த டிக்கட் வாங்கியவர் நீங்கள்தான். அந்தப் பணம் உங்களைச் சேரவேண்டியதுதான்" என்றார் நடேச ஐயர்.

"மாமா! இந்தப் பரிசு கிடைத்ததற்குக் காரணம் என் பணம் மட்டுமல்ல; உங்கள் அதிர்ஷ்டத்தினால்தான். என் அதிர்ஷ்டத்தினால் பணம் வருவதாக இருந்தால் என் டிக்கட்டுக்கே பரிசு விழுந்திருக்கும். ஆகையால் இருவரும் பரிசைச் சமபாகமாகப் பங்கிட்டுக் கொள்வோம்" என்றான் சிவராமன்.

"பலே சபாஷ்! சரியான யோசனை!" என்று கூறினார் நடேச ஐயர். சந்தோஷத்தால் அவர் முகம் மலர்ந்தது. "மாப்பிள்ளை! நான் எவ்வளவுதான் முயற்சி செய்தாலும் உங்கள் அன்பு வலையிலிருந்து தப்பித்துக் கொள்ள முடியவில்லை" என்று ஒப்புக்கொண்டார்.

# பொன்னியின் செல்வன்

## கல்கி



மணியம்

## முதல் பாகம்

## புது வெள்ளம்

# பொன்னியின் செல்வன்




ஆதி அந்தமில்லாத கால வெள்ளத்தில் கற்பனை ஓடத்தில் ஏறி நம்முடன் சிறிது நேரம் பிரயாணம் செய்யுமாறு நேயர்களை அழைக்கிறோம். விநாடிக்கு ஒரு நூற்றாண்டு வீதம் எளிதில் கடந்து இன்றைக்குத் தொள்ளாயிரத்து எண்பத்திரண்டு ஆண்டுகளுக்கு முந்திய காலத்துக்குச் செல்வோமாக.

தொண்டை நாட்டுக்கும் சோழ நாட்டுக்கும் இடையில் உள்ள திருமுனைப்பாடி நாட்டின் தென்பகுதியில், தில்லைச் சிற்றம்பலத்துக்கு மேற்கே இரண்டு காத தூரத்தில், அலை கடல் போன்ற ஓர் ஏரி விரிந்து பரந்து கிடக்கிறது. அதற்கு **வீர நாராயண ஏரி** என்று பெயர். அது தெற்கு வடக்கில் ஒன்றரைக் காத நீளமும் கிழக்கு மேற்கில் அரைக் காத அகலமும் உள்ளது. காலப் போக்கில் அதன் பெயர் சிதைந்து இந்நாளில் 'வீராணத்து ஏரி' என்ற பெயரால் வழங்கி வருகிறது.

புது வெள்ளம் வந்து பாய்ந்து ஏரியில் நீர் நிரம்பித் ததும்பி நிற்கும் ஆடி ஆவணி மாதங்களில் வீர நாராயண ஏரியைப் பார்ப்பவர் எவரும் நம்முடைய பழந் தமிழ் நாட்டு முன்னோர்கள் தங்கள் காலத்தில் சாதித்த அரும்பெரும் காரியங்களைக் குறித்துப் பெருமிதமும் பெரு வியப்பும் கொள்ளாமலிருக்க முடியாது. நம் மூதாதையர்கள் தங்களுடைய நலனுக்கும் தங்கள் காலத்திய மக்களின் நலனுக்கும் உரிய காரியங்களை மட்டுமா செய்தார்கள்? தாய்த் திருநாட்டில் தங்களுக்குப் பிற்காலத்தில் வாழையடி வாழையாக வரப்போகும் ஆயிரங் கால சந்ததிகளுக்கும் நன்மை பயக்கும் மாபெரும் செயல்களை நிறைவேற்றி விட்டுப் போனார்கள் அல்லவா?

* * *

ஆடித் திங்கள் பதினெட்டாம் நாள் முன் மாலை நேரத்தில் அலைகடல் போல் விரிந்து பரந்திருந்த வீர நாராயண ஏரிக்கரை மீது ஒரு வாலிப வீரன் குதிரை ஏறிப் பிரயாணம் செய்து கொண்டிருந்தான். அவன் தமிழகத்து வீர சரித்திரத்தில் புகழ் பெற்ற வாணர் குலத்தைச் சேர்ந்தவன். **வல்லவரையன் வந்தியத்தேவன்** என்பது அவன் பெயர். நெடுந்தூரம் பிரயாணம் செய்து அலுத்துக் களைத்திருந்த அவனுடைய குதிரை மெள்ள மெள்ள நடந்து சென்று கொண்டிருந்தது. அதைப்பற்றி அந்த இளம் வீரன் கவலைப்படவில்லை. அகண்டமான அந்த வீர நாராயண ஏரியின் தோற்றம் அவன் உள்ளத்தை அவ்வளவாக வசீகரித்திருந்தது.

ஆடிப் பதினெட்டாம் பெருக்கன்று சோழநாட்டு நதிகளிலெல்லாம் வெள்ளம் இரு கரையும் தொட்டுக் கொண்டு ஓடுவது வழக்கம். அந்த நதிகளிலிருந்து தண்ணீர் பெறும் ஏரிகளும் பூரணமாக நிரம்பிக் கரையின் உச்சியைத் தொட்டுக் கொண்டு அலை மோதிக் கொண்டிருப்பது வழக்கம். வடகாவேரி என்று பக்தர்களாலும் கொள்ளிடம் என்று பொது மக்களாலும் வழங்கப்பட்ட நதியிலிருந்து வடவாற்றின் வழியாகத் தண்ணீர்

பந்து வீர நாராயண ஏரியில் பாய்ந்து அதை ஒரு பொங்கும் கடலாக ஆக்கியிருந்தது. அந்த ஏரியின் எழுபத்து நான்கு கணவாய்களின் வழியாகவும் தண்ணீர் குழுகுழுவென்று பாய்ந்து சுற்றுப் பக்கத்தில் நெடுந் தூரத்துக்கு நீர்வளத்தை அளித்துக் கொண்டிருந்தது. அந்த ஏரித் தண்ணீரைக் கொண்டு கண்ணுக்கெட்டிய தூரம் கழனிகளில் உழவும் விரை தெளியும் நடவும் நடந்து கொண்டிருந்தன. உழுது கொண்டிருந்த குடியானவர்களும் நடவு நட்டுக்கொண்டிருந்த குடியானப் பெண்களும் இனிய இசைகளில் குதூகலமாக அங்கங்கே பாடிக் கொண்டிருந்தார்கள். இதையெல்லாம் கேட்டுக் கொண்டு வந்தியத் தேவன் ஏறியிருந்த குதிரையை விரட்டாமல் மெதுவாகவே போய்க் கொண்டிருந்தான். ஏரிக்கரைமீது ஏறியதிலிருந்து அந்த ஏரிக்கு எழுபத்துநாலு கணவாய்கள் உண்டு என்று சொல்லப்படுவது உண்மைதானா என்று அறிந்து கொள்ளும் நோக்கத்துடன் அவன் கணவாய்களை எண்ணிக் கொண்டே வந்தான். ஏறக்குறைய ஒன்றரைக் காத தூரம் அவன் அந்த மாபெரும் ஏரிக்கரையோடு வந்த பிறகு எழுபது கணவாய்களை எண்ணியிருந்தான்.

ஆகா! இது எவ்வளவு பிரம்மாண்டமான ஏரி? எத்தனை நீளம்? எத்தனை அகலம்? தொண்டை நாட்டில் பல்லவப் பேரரசர்களின் காலத்தில் அமைத்த ஏரிகளையெல்லாம் இந்த ஏரிக்கு முன்னால் சிறிய குளங்குட்டைகள் என்றே சொல்லத் தோன்றும் அல்லவா? வட காவேரியில் வீணாகச் சென்று கடலில் விழும் தண்ணீரைப் பயன் படுத்துவதற்காக மதுரை கொண்ட பராந்தகரின் புதல்வர் இளவரசர் இராஜாதித்தர் இந்தக் கடல்போன்ற ஏரியை அமைக்க வேண்டுமென்று எண்ணினாரே? எண்ணி அதைச் செயலிலும் நிறைவேற்றினாரே? அவர் எப்பேர்ப் பட்ட அறிவாளியாயிருக்கவேண்டும்? வீர பௌருஷத்திலேதான் அவருக்கு இணை வேறு யார்? தக்கோலத்தில் நடந்த போரில் தாமே முன்னணியில் யானை மீது ஏறிச் சென்று போராடினார் அல்லவா? போராடிப் பகைவர்களின் வேலை மார்பிலே தாங்கிக் கொண்டு உயிர் நீத்தார் அல்லவா? அதனால் 'யானைமேல் துஞ்சிய தேவர்' எனப் பெயர்பெற்று வீர சொர்க்கம் அடைந்தார் அல்லவா?

இந்தச் சோழகுலத்து மன்னர்களே அதிசயமானவர்கள்தான்! அவர்கள் வீரத்தில் எப்படியோ அப்படியே அறத்திலும் மிக்கவர்கள். அறத்தில் எப்படியோ அப்படியே தெய்வபக்தியில் சிறந்தவர்கள். அத்தகைய சோழகுல மன்னர்களுடன் நட்புரிமை கொள்ளும் பேறு தனக்குக் கிடைத்திருப்பது பற்றி நினைக்க நினைக்க வந்தியத்தேவனுடைய தோள்கள் பூரித்தன. மேற்குத் திசையிலிருந்து விர்ரென்று அடித்த காற்றினால் வீர நாராயண ஏரித் தண்ணீர் அலைமோதிக் கொண்டு கரையைத் தாக்கியதுபோல் அவனுடைய உள்ளமும் பெருமிதத்தினால் பொங்கித் ததும்பிற்று.

இப்படியெல்லாம் எண்ணிக் கொண்டு வீர நாராயண ஏரிக் கரையின் தென்கோடிக்கு வந்தியத் தேவன் வந்து சேர்ந்தான். அங்கே வடகாவேரியிலிருந்து பிரிந்து வந்த வடவாறு ஏரியில் வந்து சேரும் காட்சியைக் கண்டான். ஏரிக்கரையிலிருந்து சிறிது தூரம் வரையில் ஏரியின் உட்புறம் படுகையாக அமைந்திருந்தது. வெள்ளம் வந்து மோதும்போது கரைக்குச் சேதம் உண்டாகாமலிருக்கும் பொருட்டு அந்தப் படுகையில் கருவேல மரங்களையும் விளா மரங்களையும் நட்டு வளர்த்திருந்தார்கள். கரையோரமாக நாணல் அடர்த்தியாக வளர்ந்திருந்தது. தென்மேற்குத் திசையிலிருந்து இருபுறமும் மர வரிசையுடன் வடவாற்றின் வெள்ளம் வந்து ஏரியில் கலக்கும் காட்சி சற்றுத் தூரத்திலிருந்து பார்க்கும்போது அழகிய வர்ணக் கோலம் போட்டது போல் காணப்பட்டது.




இந்த மனோகரமான தோற்றத்தின் இனிமையையும் குதூகலத்தை

யும் அதிகப்படுத்தும் படியான இன்னும் சில காட்சிகளை வந்தியத்தேவன் அங்கே கண்டான்.

அன்று பதினெட்டாம் பெருக்குத் திருநாள் அல்லவா? பக்கத்துக் கிராமங்களிலிருந்து, தந்த நிறத் தென்னங் குருத்துகளால் சப்பரங்கள் கட்டி இழுத்துக் கொண்டு கும்பல் கும்பலாக மக்கள் அங்கே வந்து கொண்டிருந்தார்கள். ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் சில வயோதிகர்களும் கூடப் புதிய ஆடைகள் அணிந்து விதவிதமான அலங்காரங்கள் செய்து கொண்டு வந்திருந்தார்கள். பெண்களின் கூந்தல்களைத் தாழம்பூ, செவந்திப்பூ, மல்லிகை, முல்லை, இருவாட்சி, செண்பகம் முதலிய மலர்கள் கொத்துக் கொத்தாய் அலங்கரித்தன. கூட்டாஞ் சோறும், சித்திரான்னமும் எடுத்துக் கொண்டு பலர் குடும்பங் குடும்பமாக வந்திருந்தார்கள். சிலர் ஏரிக்கரையில் தண்ணீர் ஓரமாக நின்று கொண்டு, சித்திரான்னம் முதலியவற்றைக் கமுகு மட்டைகளில் போட்டுக் கொண்டு உண்டார்கள். இன்னும் சில தைரியசாலிகள் சிறிது தூரம் தண்ணீரில் நடந்து சென்று வடவாற்றங் கரையை அடைந்து அங்கு நின்றபடி சாப்பிட்டார்கள். குழந்தைகள் சிலர் சாப்பிட்ட கமுகு மட்டைகளைக் கணவாய்களின் ஓரமாய் எறிய, அந்த மட்டைகள் கணவாய்களின் வழியாக ஏரிக்கரைக்கு வெளியே விழுந்தடித்து ஓடி வருவதைக் கண்டு கை கொட்டிச் சிரித்தார்கள். ஆடவர்களில் சில வம்புக்காரர்கள் தங்கள் காதலிகளின் கூந்தல்களில் சூடியிருந்த மலர்களை அவர்கள் அறியாமல் எடுத்துக் கணவாய் ஓரத்தில் விட்டு ஏரிக் கரைக்கு மறு பக்கத்தில் அவை ஓடி வருவதைக் கண்டு மகிழ்ந்தார்கள்.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டு சிறிது நேரம் வல்லவரையன் அங்கேயே நின்று கொண்டிருந்தான். அங்கு நின்ற பெண்களில் இனிய குரலுடைய சிலர் பாடுவதையும் காது கொடுத்துக் கேட்டான். அவர்கள் ஓடப் பாட்டும், வெள்ளப் பாட்டும், கும்மியும், சிந்தும் பாடினார்கள்.

"வடவாறு பொங்கி வருது
வந்து பாருங்கள், பள்ளியரே!



வெள்ளாறு விரைந்து வருது
வேடிக்கை பாருங்கள், தோழியரே!
காவேரி புரண்டு வருது
காண வாருங்கள், பாங்கியரே!"

என்பன போன்ற வெள்ளப் பாட்டுக்கள் வந்தியத்தேவன் செவிகளில் இன்ப வெள்ளமாகப் பாய்ந்தன.

வேறு சிலர் சோழகுல மன்னர்களின் வீரப் புகழைக் கூறும் பாடல்களைப் பாடினார்கள். முப்பத்திரண்டு போர்களில் ஈடுபட்டு உடம்பில் தொண்ணூற்றாறு காயங்களை ஆபரணங்களாகப் பூண்டிருந்த விஜயாலய சோழனின் வீரத்தைச் சில பெண்கள் பாடினார்கள். அவனுடைய மகன் ஆதித்த சோழனுடைய வீரத்தைப் போற்றி, அவன் காவேரி நதி உற்பத்தியாகு மிடத்திலிருந்து கடலில் சேரும் இடம் வரையில் அறுபத்து நாலு சிவாலயங்கள் எடுப்பித்ததை ஒரு பெண் அழகிய பாட்டாகப் பாடினாள். ஆதித்தனுடைய மகன் பராந்தக சோழ மகாராஜன் பாண்டியர்களையும் பல்லவர்களையும் சேரர்களையும் வென்று ஈழத்துக்குப் படை அனுப்பி வெற்றிக் கொடி நாட்டிய மெய்க் கீர்த்தியை இன்னொரு பெண் உற்சாகம் ததும்பப் பாடினாள். ஒவ்வொருத்தியும் பாடியபோது அவளைச் சுற்றிலும் பலர் நின்று கேட்டார்கள். அவ்வப்போது "ஆ! ஆ!" என்று கோஷித்துத் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டார்கள்.

குதிரைமீது இருந்தபடியே அவர்களுடைய பாடல்களைக் கேட்டுக் கொண்டிருந்த வந்தியத் தேவனை ஒரு மூதாட்டி கவனித்தாள். "தம்பி! வெகுதூரம் வந்தாய் போலிருக்கிறது. களைத்திருக்கிறாய்! குதிரை மீதிருந்து இறங்கி வந்து கொஞ்சம் கூட்டாஞ் சோறு சாப்பிடு!" என்றாள்.

உடனே, பல இள நங்கைகள் நம் வாலிபப் பிரயாணியைப் பார்த்தார்கள். அவனுடைய தோற்றத்தைக்



கண் பட்டதோ, தெரியவில்லை! மகிழ்ச்சிக் கடலில் மிதந்து கொண்டிருந்த உலகம் ஒரு நொடியில் துயரக் காடாக மாறி விட்டது! விதி இப்படிச் சதி செய்யும் என்று யாராவது கனவிலும் சிந்தித்திருப்பார்களா? நியூனஸ் சிலைபோல வாய் அடைத்து ஆடாமல் அசையாமல் உட்கார்ந்திருந்தாள். பருன் அம்னஸோ கட்டுக்கடங்காத மகிழ்ச்சி வெறியில் மூழ்கிப் பித்தனாகவே ஆகிவிட்டான். எகிப்து நாட்டின் சட்டதிட்டங்களும் பிரதான புரோகிதனும் தன் கட்சியில் இருக்கும் பொழுது அவனுக்கு அளவற்ற ஆனந்தம் ஏற்படுவதும் அதில் அவன் தலைகால் தெரியாமல் மூழ்குவதும் இயல்புதானே?

கொஞ்சம் கொஞ்சமாக ரேம்பஸுக்கு நிலைமை தெளிவாக விளங்கியது. நகரத்து மக்கள் உள்ளத்தைத் துளைக்கும் வேதனை மிக்க இந்தச் சமாசாரத்தைக் கேள்வியுற்றதும் மாளிகையின் வாசலில் வந்து கூடலாயினர். 'என்ன நடக்குமோ?' என்ற ஆதங்கமும் பரபரப்பும் மக்களுக்கு ஏற்படுவது சகஜந்தானே? கொடுங்கோலனின் கொடுங்கோன்மையி லிருந்து தப்பி விட்டதாக எண்ணிப் பூரித்துக் கொண்டிருந்த மக்கள் மறுபடியும் அதே கொடுங்கோலனின் ஆட்சிக்கு உட்பட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிட்டால் குலை நடுக்க முறுவதும் பீதியில் பயந்து சாவதும் சகஜமே அல்லவா? ஆகவே, மக்கள் மாளிகையின் வாசலிலே திரள் திரளாக வந்து 'கசமுச' வென்று பேசலாயினர்.

ரேம்பஸ் ஓடிப்போய்ப் பருனின் காலடிகளிலே மண்டியிட்டுக் கொண்டு உட்கார்ந்தான். பிறகு அண்ணாந்து பருனின் முகத்தையே பார்த்தவாறு, "எனக்கு ராஜ்யமும் வேண்டாம்; சிம்மாசனமும் வேண்டாம்; மகுடமும் வேண்டாம்; ஒன்றுமே வேண்டாம். எல்லாவற்றையும் நீங்களே எடுத்துக் கொள்ளுங்கள். ஆனால் என் இதயபீடத்தில் அமர்ந்திருக்கும் என் உள்ளத்தரசியை மட்டும் அகற்றி விடாதீர்கள்; பிரித்து விடாதீர்கள்! உங்களுக்குக் கோடிப் புண்ணியமுண்டு!" என்றான்.

அதைச் சொல்லி முடித்ததும் அவன் தன் கிரீடத்தைத் தலையிலிருந்து கழற்றிப் பருனின் கையில் வைத்தான். பிறகு, "இந்தாருங்கள், உங்கள் மகுடம்! இது எனக்கு வேண்டாம்; வேண்டவே வேண்டாம்!" என்றான்.

ஆனால் பருன் அம்னஸ் மகுடத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. அவனிடம் அதைத் திருப்பிக் கொடுத்து விட்டுத் தலையை அசைத்து. "வேண்டும் அளவு ராஜ்ய பாரம் செய்து செய்து எனக்கு அலுத்துவிட்டது. இப்பொழுது என் நாட்டம் எல்லாம் அன்பு ஒன்றிலேதான் சென்றிருக்கிறது. அன்பு ஒன்றைத் தவிர வேறு எதையும் சிந்திக்க என் மனம் இடம் கொடுக்கவில்லை. அன்பு! அன்பு! அன்பு! இந்த ஸ்மரணையைத் தவிர எனக்கு வேறு எந்த ஸ்மரணையும் கிடையாது. எனவே, இந்த மகுடத்தை நீயே வைத்துக் கொள். எகிப்து நாடும் எகிப்து நாட்டு மக்களும் உன்னையேதான் விரும்புகிறார்கள். உன்னை விரும்பியதோடு மட்டும் அல்ல; உன்னையே பருனாகவும் தேர்ந்தெடுத்து விட்டார்கள். உன் இஷ்டம் போல நீ ஆட்சி புரி. எனக்கு எவ்வித மான ஆட்சேபணையும் இல்லை. ஆனால் ஒன்று; என் நியூனஸை எனக்குக் கொடுத்துவிடு. அவளைத் தவிர நான் வேறு எதையும் வேண்டேன். புரோகிதன்கூட அவள் எனக்குத்தான் உடைமையானவள் என்பதை உனக்கு எடுத்துச் சொல்லி விட்டான். ஆகவே, நியூனஸை என்னிடம் ஒப்படைத்து விடு! அதுதான் நியாயமும் தர்மமும்" என்றான்.

இவ்வாறு சொல்லியவாறே அவன் நியூனஸின் கைகளைப் பிடித்தான். (தொடரும்)



## சங்கீத அரங்கேற்று விழா

சென்ற 6ல தஞ்சை ஸ்ரீ சங்கரமடத்தில் டாக்டர் கே. ராமராவ் அவர்களின் மருமான் குமாரி பிரேமாவின் சங்கீத வித்யா அரங்கேற்று விழா வெகு சிறப்பாக நடைபெற்றது. விழாவுக்குத் தலைமை வகித்த பாஜி ஜில்லா கல்வி அதிகாரி ஸ்ரீ பி. கே. பட்டாபிராம சாஸ்திரிகள் குமாரி பிரேமாவின் சங்கீத ஞானம் மேலும் மேலும் வளர ஆசி கூறிவிட்டு, இவ்வளவு சிறப்பாக சங்கீதம் கற்பித்த சங்கீத பூஷணம் ஸ்ரீ பி. வி. கணேசய்யரின் திறமையைப் பாராட்டினார். மேற்படி விழாவுக்கு ஆஸ்தான கவி ராமலிங்கம் பிள்ளை முதலான பல பிரமுகர்களிடமிருந்து வாழ்த்துச் செய்திகள் வந்திருந்தன.

# இந்த முறைப்படி டால்டா



## உபயோகித்து ருசிமிக்க பலூஷாக்களை தயாரியுங்கள்

மூன்று பலூஷாக்களை தயாரிக்க: 1 கப் மைதா மாவில் 2 பெரிய ஸ்பூன் டால்டாவை நன்கு கலந்து பிசைந்தமா தயாரிக்கவும். மாவை சிறிய வட்டங்களாக தட்டி நடுநடுவே சிறிது பள்ளம் செய்துகொள்ளவும். டால்டாவை வாணலியில் பொரிக்குமளவு சூடாக்கி, அடுப்பிலிருந்து இறக்கவும். அதில் வட்டங்களை மெதுவாகப் போடவும். வட்டங்கள் நன்கு உப்பி ஒரே மாதிரியாக சிவப்பதுவரை வாணலியை அடுப்பில் ஏற்றவும் இறக்கவும் செய்யவேண்டும். பிறகு, வட்டங்களை துவாரங்கள் உள்ள தட்டில் வைத்துசூடான கெட்டி சர்க்கரைப்பாகை தடவிஆறவைக்கவும்.

டால்டா ஒரு சுத்தமான தாவர கொழுப்பாகையால் அது அதிக நேரம் சூட்டைத்தாங்குகிறது—எனவே, உணவுகள் ஒழுங்காக முழுவதும் பக்குவமாவதற்கு போதுமான சாவகாசம் அளிக்கிறது.




எந்த உணவுகள் உங்கள் இரத்தத்தை புஷ்டியாக்குகின்றன?

இலவச ஆலோசனைகளுக்கு இன்றே—அல்லது என்று வேண்டுமானாலும்—எழுதுங்கள்!

**தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்**

தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1

HVM. 119A-172 TM

# இலட்சியக் கணவன்

கமலா சக்கரவர்த்தி

**ப**தினாறு வயதில் உலகமே இன்ப மயமாகத் தோன்றியது சித்திராவுக்கு. இரவுகளில் ஆனந்தக் கனவுகள் கண்டாள். பகலில் ஆகாசக் கோட்டைகள் கட்டினாள். வீட்டில் தன்னுடைய விவாகத்தைப் பற்றிச் சர்ச்சை நடக்கும்போதெல்லாம் அனேகவிதமான கற்பனைகளைச் செய்து அவற்றை ஒன்று சேர்த்து வைத்திருந்தாள்.

தாய் தந்தையரால் எவ்வளவு பாடுபட்டும், சித்திராவின் இலட்சியக் கணவனைக் கண்டுபிடிக்க முடியவில்லை. ஒரு விஷயத்தில் மட்டும் சித்திரா தீர்மானமான அபிப்பிராயம் கொண்டிருந்தாள். அதாவது, 'தன்னுடைய வரப்போகும் கணவர் ஒரு பிரசித்தமானவராக இருக்க வேண்டும். எந்த 'லய'னில் இருந்தாலும் அவருடைய பெயரைக் கேட்ட மாத்திரத்தில் எல்லோரும் 'ஆஹாகாரம்' போட வேண்டும். எவ்வளவுதான் பணம், அந்தஸ்து எல்லாம் இருக்கட்டுமே, ஒரு பிரசித்தி பெற்ற பெயருக்கு முன்னால் அவையெல்லாம் எம்மாத்திரம்!' என்று சதாகாலமும் அவள் மனம் சொல்லிக் கொண்டிருந்தது.

இரண்டு வருஷங்கள் பறந்து சென்றன. சித்திராவின் மனது சித்திரித்து வைத்திருந்த இலட்சியக் கணவனை ஒருவராலும் கண்டு பிடிக்க முடியவில்லை. அவளுடைய வயதுப் பெண்கள், தோழிகள் எல்லோருக்கும் அனேகமாக விவாகமாகி விட்டது. ஆனால் அந்தப் பெண்களுடைய பரிதாபகரமான மண வாழ்க்கையை நினைத்துப் பார்த்தால் சித்திராவுக்கு என்னமோ செய்தது.



"இதற்கு முன்னால் நீ யாரிடம் வேலை பார்த்தாய்?"

"கிருஷ்ணமூர்த்திச் செட்டியாரிடத்தில்..."

"அவரிடமிருந்து ஏதாவது நற்சாட்சிப் பத்திரம் வைத்திருக்கிறாயா?"

"இல்லை ஸார்! ஆனால் அவருடைய கைக்கடிகாரம் என் கையில்தான் இருக்கிறது!"

அவள் அருமைத் தோழி லலிதாவின் கணவன் ஒரு டாக்டர். அப்பப்பா! வீட்டில் ஒரு நிமிஷம்கூட அவரால் நிம்மதியாக இருக்க முடியாது. எப்போது பார்த்தாலும் நோயாளிகளின் தொந்தரவுதான். இதுவரையில் லலிதாவும் அவள் கணவனும் சேர்ந்து ஒருநாள்கூட வெளியில் போகாததைப் பற்றி லலிதா சொல்லி எவ்வளவு அழுதாள்—சீ! இந்த டாக்டர்களே ரொம்ப மோசம்தான்!

அடுத்தது, சாவித்திரியின் கணவர். அவர் ஒரு சினிமா டைரக்டர். ஒரு நாளாவது வீட்டில் சாப்பிட மாட்டார். பகலில் மாடு மாதிரி தூங்கிவிட்டு, இரவுகளில் உழைப்பார். அன்று ஒரு நாள் சாவித்திரி சித்திராவிடம் சொன்னாள்:

"ஒரு தடவை வீட்டிற்குச் சுருக்க வந்து விட்டாரடி! அதைப் பார்த்துவிட்டு, 'ஏன்னா! இன்னிக்கு ஏதாவது நல்ல சினிமாவுக்குப் போகலாமா?' என்றேன். அவ்வளவுதான்! ஒரு தடவை விழித்துப் பார்த்துவிட்டு, 'சாவித்திரி! உனக்குக் கொஞ்சம் கூடப் புத்தியில்லை. இப்போதுதான் நாளைக்கு எடுக்கப் போகும் ஒரு 'ஷாட்'டைப் (Shot) பற்றி யோசித்துக் கொண்டிருந்தேன். எல்லாம் தொலைந்து போயிற்று. போ!' என்றார்.

இதைக் கேட்ட பிறகு, 'என்ன வந்தாலும் சினிமா தொழிலிலுள்ளவர்களை விவாகம் செய்து கொள்வதில்லை' என்று பிரதிக்ஞை செய்துகொண்டாள் சித்திரா.

அடுத்தது சாரதாவின் கணவர். கல்யாணத்தின்போது எல்லோரும் அவள் கணவரைப் புகழ்ந்தார்கள். சித்திராவுக்கும் அவர்மீது நல்ல அபிப்பிராயம் விழுந்திருந்தது. ஆனால் போன ஞாயிற்றுக் கிழமை அவள் வீட்டுக்குப் போயிருந்த போது அந்த அபிப்பிராயம் அடியோடு மாறிப் போயிற்று. அவர் பெண்டாட்டிக்குப் பல்லை இளித்துக்கொண்டு செய்யும் உபசாரங்களும், பாத்திரங்களைத் தேய்த்துக் கொடுப்பதும், தேங்காய் அரைத்துக் கொடுப்பதும் சகிக்க முடியாததாக இருந்தது. சீ! என்ன இருந்தாலும் ஒரு புருஷனுக்குத் தைரியம் வேண்டாமா?

**ஆ**ழ்ந்த மனோ ராஜ்யத்தில் ஈடுபட்டிருந்த சித்திராவை அவள் தாயார் எழுப்பிக் கொண்டிருந்தாள். "சித்திரா! சீக்கிரம் எழுந்திரு! என்ன தூக்கம் மத்தியான வேளையிலே? அப்பா வந்திருக்கிறார். ஏதோ நல்ல சமாசாரம் போலிருக்

றது. ரொம்ப சந்தோஷமா யிருக்கிறார். உம், எழுந்திரு!' என்றான்.

வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்திருந்து அவசர அவசரமாக முகத்தை அலம்பிக் கொண்டு தந்தையின் அறைக்கு ஓடினாள் சித்திரா.

ஊஞ்சலில் உட்கார்ந்து ஆடிக் கொண்டிருந்த தந்தையின் அருகில் மெதுவாக உட்கார்ந்து கொண்டாள் சித்திரா. அவருடைய கண்களில் நீர் நிறைந்திருந்தது.

"அம்மா, சித்திரா! கடைசியில் உன்னுடைய விருப்பத்துக்கேற்ற வரனை ஒரு மாதிரி கண்டு பிடித்து விட்டேன். இருந்தாலும், உன்னுடைய சம்மதம் கிடைத்தால் தானம்மா, எனக்கு நிம்மதி உண்டாகும். பையன் பெயர் ரகுநாதன். ராமானந்தா காலேஜில் சரித்திர புரொபசர். ஆராய்ச்சியும் செய்கிறானும். இப்பொழுதே அவனுக்கு நல்ல பெயர். இன்னும் ஆராய்ச்சிகள் முடிவடைந்தால் உலகப் பிரசித்தியாகவும்கூட ஆகலாம் என்று சொல்கிறார்கள். கண்ணுக்கும் லக்ஷணமா யிருக்கிறான்!......"

சித்திரா மௌனமாக அழுது கொண்டிருந்தாள். அதில் ஆனந்தமும் துக்கமும் போட்டியிட்டன.

சில நாட்களுக்கெல்லாம் கல்யாணம் வெகு விமரிசையாக நடந்தது. வந்திருந்தவர்கள் எல்லோருக்கும் அநேகமாக ரகுநாதனைத் தெரிந்திருந்தது. சித்திராவின் உள்ளம் பெருமையினால் பூரித்துப் போயிற்று.

ஆறு மாதத்தில் சித்திராவின் முயற்சியாலும், தூண்டுதலாலும் ரகுநாதன் சரித்திர ஆராய்ச்சிகளைத் துரிதமாக ஆரம்பித்தான். 'உலகப் பிரசித்தி பெற்ற சரித்திர ஆராய்ச்சியாளர் ரகுநாதனும், அவருடைய முயற்சிக்குத் தூண்டுதலா யிருந்த அவரது அருமை மனைவியும்' என்று பத்திரிகையில் புகைப் படங்கள் பிரசுரமாகும் நன்னாளை ஆவலுடன் எதிர்நோக்கிக் கொண்டிருந்தாள் சித்திரா

கடைசியில் ரகுநாதனின் சரித்திர ஆராய்ச்சி முடிவு பெற்றது. காலேஜில் எல்லோரும் பிரமித்துப் போனார்கள். அன்று சாயங்காலம் இதை யொட்டிக் கலாசாலையில் பெரிய பொதுக் கூட்டத்துக்கு ஏற்பாடாயிற்று. பேராசிரியர் ரகுநாதனைச் சென்னைப் பட்டணத்தில் எல்லோருக்கும் அறிமுகப்படுத்தவும், அவர் செய்திருக்கும் அற்புத ஆராய்ச்சிகளை எல்லோருக்கும் எடுத்துரைக்கவும் இதை ஏற்படுத்தியிருந்தனர் கலாசாலை அதிகாரிகள்.

சித்திரா அன்று இந்த உலகிலேயே யிருக்கவில்லை. அழுதாள், சிரித்தாள்,



ரகுநாதனைக் கட்டிக் கொண்டான். காலேஜில் அவன் நடந்துகொள்ள வேண்டிய விதத்தைப் பற்றிச் சதா உபதேசம் செய்தான்.

ஆறு மணி சுமாருக்குச் சென்னைப் பட்டணத்தில் உள்ள மூக்கால்வாசிப் பேர் கலாசாலைக் கட்டிடத்தில்கூடிவிட்டார்கள்.

கழுத்தில் ரோஜாப்பூ மாலையுடன் உட்கார்ந்திருந்த ரகுநாதனைக் கண்ட சித்திராவின் கண்களில் நீர் துளித்தது.

கூட்டம் சிறிது அடங்கி நிச்சப்தம் ஆனவுடன் பிரின்ஸிபால் எழுந்திருந்து தன் தொண்டையை ஒரு தடவை கனைத்துக் கொண்டார்.

அடுத்த நிமிஷம் கூட்டத்தில் கலவரமேற்பட்டது. ஜனங்கள் ஏதோ 'கசமுச'வென்று பேசிக் கொள்வதும், சிலர் ஜன்னல் வழியாக எட்டிப் பார்ப்பதும், "என்ன? என்ன?" என்பதும் ஒரே கலவரமாகப் போய்விட்டது. இதற்குள் வெளியில் சென்றிருந்த ஒருவன் அவசர அவசரமாக உள்ளே வந்து என்னவோ சொன்னான். அவ்வளவுதான்; அடுத்த விநாடி கலாசாலை மண்டபம் அப்படியே காலியாயிற்று. ரகுநாதனையும், சித்திராவையும் தவிர, பிரின்ஸிபால் உள்பட எல்லோரும் விழுந்தடித்துக் கொண்டு வெளியே ஓடினார்கள்.

ஒன்றும் புரியாமல் உட்கார்ந்துகொண்டு இருந்தார்கள் சித்திராவும் ரகுநாதனும். அப்பொழுது இரைக்க இரைக்க ஓடி வந்த பிரின்ஸிபால், "மிஸ்டர் ரகுநாதன், மன்னியுங்கள். நமது காலேஜ் கட்டிடத்திற்கு எதிராகப் பிரசித்தி பெற்ற நடிகர் 'குமார'ரின் மோட்டார் கார் டயர் பங்ச்சர் ஆகியிருக்கிறது. பாவம், அவரே காரை ஓட்டிக் கொண்டு வந்திருக்கிறார், உங்களுக்குத்தான் தெரியுமே, நம்மூர் ஜனங்களை? அவரைச் சுற்றி அவர்கள் வளைத்துக் கொண்டிருக்கிறார்கள். நீங்கள் இங்கேயே இருங்கள், நானும் ஒரு முறை அவரைப் பார்த்துவிட்டு வருகிறேன்!" என்று ஒரே மூச்சில் கூறிவிட்டு ஓடினார்.

சித்திரா அடியற்ற மரம்போல் நாற்காலியில் சாய்ந்தாள்.

ரகுநாதன், "சித்திரா! சித்திரா! என்ன ஆயிற்று, உனக்கு? சொல்லேன், சித்திரா?" என்று அவள் தோள்களைப் பிடித்துக் குலுக்கினான். துக்கம் கலந்த ஒரு வறட்டுச் சிரிப்புடன் அவனை ஏறிட்டு நோக்கினாள் சித்திரா. அந்தப் பார்வையில் இருந்த அர்த்தத்தை ரகுநாதன் புரிந்து கொண்டான்.

# மிஸ்டர் அப்பு

## 12. யாருடைய அதிருஷ்டம்?

அன்று காலை அப்புவின் கையில் நூறு ரூபாய் நோட்டுக்களாகப் பதினுயிர ரூபாய் இருந்தது. சங்கரன் அந்தப் பணத்தைக் கொண்டு வந்து கொடுத்ததும்தான் தன்னுடைய நான்கு வருட திட்டத்தில் பிரதான அம்சமே பூர்த்தியடைந்து விட்டதாக நினைத்தான் அப்பு. கூடிய சீக்கிரம் ஒரு சுபயோக சுபதினத்தில் சங்கரனுக்கும் மீனுவுக்கும் விமரிசையாக விவாகத்தை நடத்தி விடப் போவதாகவும், அதற்கு முன்னுல் மீனு, சங்கரனைப் பூரணமாகக் காதலிக்கும்படி ஏற்பாடுகள் செய்ய வேண்டுமென்றும், காதல் இல்லாமல் கலியாணம் செய்வது தங்கள் கொள்கைகளுக்கே முரணுனது என்றும் சொன்னுன். சங்கரனும் வழக்கம் போல் அப்புவின் வார்த்தைகளை மனப்பூர்வமாக ஆதரித்தான். அதோடு மட்டுமல்ல; மீனுவுக்குத் தன் மீது காதல் ஏற்படுவதற்காக மிச்சமாக வைத்திருந்த ஐயாயிர ரூபாய்க்கும் ஒரு வைர 'நெக்லேஸ்' வாங்கி அப்புவிடம் கொடுத்தனுப்பினுன்.




வாரம் ஒன்று ஓடியது; சங்கரன் மீனுவின் காதல் சமிக்ஞை 'என்று கிடைக்கும், என்று கிடைக்கும்' என்று காத்திருந்தான். அப்பு காதல் தீயில் புழுங்கும் சங்கரனுக்கு அடிக்கடி சமாதான வார்த்தைகள் சொல்லிக் கொண்டிருந்தான். 'மீனுவின் மனது இப்பொழுதுதான் கொஞ்சம் கொஞ்சமாக இளகிக் கொண்டு வருவதாகவும், அவள் சில நாள் சொப்பனத்தில் கூடச் சங்கரனை நினைத்துப் புலம்புவதாகவும் கூடிய சீக்கிரம் அவள் தன்னுடைய நினைவிலேயே புலம்ப ஆரம்பிப்பாள் என்று எதிர்பார்ப்பதாகவும், அப்படி அவள் புலம்ப ஆரம்பித்தவுடனேயே கல்யாணத்தை




"மோட்டார் விபத்தில் உன் கை ஒடிந்து போனதாகக் கேள்விப்பட்டேன். அது சம்பந்தமாக நீ தொடுத்த வழக்கு என்னவாயிற்று?"

"ஆயிரம் ரூபாய் நஷ்ட ஈடு கொடுத்தார்கள்!"

"பணத்தைக் கொண்டு என்ன செய்யப் போகிறாய்?"

"நான் சொந்தத்தில் ஒரு மோட்டார் வாங்கப் போகிறேன்."

---

நடத்தி விடலாமென்றும் சங்கரனிடம் சொல்லிக் கொண்டு வந்தான். எப்படியோ நாட்கள் ஓடிக்கொண்டுதான் இருந்தன. சங்கரனும் அப்புவின் வீட்டுக்கு வழியாகத் தான் நடந்தான். மீனுவின் காதல் கிடைப்பது கடினமாய் இருந்தாலும் அவள் கண் பார்வை கிடைப்பதுகூட நாளுக்கு நாள் கடினமாய் இருந்தது சங்கரனுக்கு.

ஒரு நல்ல நாளில் முனுசாமி தன்னுடைய தெருவாகிய 'குச்சுக் கட்டு'ச் சந்தில் 'காமாட்சி அம்மாள் பலகாரக் கடை' என்று தன் மனைவியின் பெயரால் ஒரு கடையை ஆரம்பித்தான். அதை ஆரம்பித்து நடத்த ஆயிரம் ரூபாய் வரையில் கொடுத்து உதவியவன் சங்கரன் என்பதுதானே பிரதானமான விஷயம்? ஆனால் அதை விடப் பிரதானமானது சங்கரனே அந்தப் பலகாரக் கடையைத் திறந்து வைத்து மூன்றரை மணி நேரம் செய்த அரியதொரு பிரசங்கம்தான். அன்று அவன் பிரசங்கத்திற்காக எடுத்துக் கொண்ட விஷயம் ஒன்றே ஒன்றுதான்— அதாவது 'இடியாப்பத்தின் மகிமை' என்பது. இடியப்பம் என்றால் என்ன? அதற்கு ஏன் இடியாப்பம் என்ற பெயர் வந்தது? இடியாப்பத்திற்கும் இட்டிலிக்கும் உள்ள வித்தியாசம் என்ன? சோவியத் ரஷ்யாவில் எத்தனை பேர் இடியாப்பம் சாப்பிடுகிறார்கள்? அமெரிக்காவில் ஒரு இடியாப்பம் எத்தனை டாலருக்கு விற்கப்படுகிறது?—என்பது போன்ற விஷயங்களைப் புள்ளி விவரங்களுடன் எடுத்துக் காட்டிச் சொல்மாரி பொழிந்தான். அன்று திறப்பு விழாவின்போது பிரசங்க முடிவில் எல்லோருக்கும் இனாமாக இடியாப்பம் வழங்கப் போவதாக முனுசாமி முன்னதாகவே ஒலிபெருக்கியின் மூலம் அறிவித்திருந்தபடியால் ஏராளமான கூட்டம் கூடியிருந்ததுமல்லாமல், கடைசி நிமிஷம் வரையில் கலையாது இருந்து சங்கரனின் அருமையான சொற்பொழிவைக் கேட்டார்கள்.

முனுசாமி தம்பதிகள் பலகாரக் கடை வைத்து வியாபாரம் செய்தாலும் சங்கரன் வீட்டில் வேலை செய்வதை நிறுத்தி விடவில்லை. பலகாரக் கடையை கவனிப்பதற்கு முனுசாமியின் வீட்டில் பொறுப்பான மனிதர்கள் இருந்தார்கள். இவ்வளவு நாளும் பழகிய வீட்டில் வேலையை விட்டுப் போவது உசிதமாகாது என்பது முனுசாமியின் எண்ணம். ஆனால் முனுசாமியும் காமாட்சியும் அந்த வீட்டில் முன் போலப் பணிவாகவும் அடக்கமாகவும் வேலை செய்வதில்லை. யாரேனும் வேலை வாங்குவதற்காக விரட்டினாலோ, திட்டினாலோ, முனுசாமியும் காமாட்சியும் பொறுத்துக் கொண்டு போவதில்லை. 'நாங்கள் விதி இல்லாமல் உங்கள் வீட்டில் வேலை செய்ய வரவில்லை. எங்களுக்குப் பலகாரக் கடை இருக்கிறது. அதில் தினம் நாற்பது ரூபாய் வியாபாரம் நடக்கிறது. அந்த வியாபாரத்திலே நாங்கள் மூன்று குடும்பத்துக்குச் சோறு போடுகிறோம். ஏதோ ரொம்ப நாளாய் வேலை செய்கிற வீடாயிற்றே என்று பழைய தோஷத்தில் இருக்கிறோம்' என்பார்கள்.

சங்கரன் முன் போல் முனுசாமியிடம் அதிகமாக வேலை வாங்குவதில்லை; மிரட்டுவதுமில்லை. முனுசாமியிடம் அவனுக்குப் பயமிருந்தது. ஏனென்றால் இரும்புப் பெட்டிக்கு மறு சாவி போட்டது முனுசாமிக்குத் தெரியுமே? அதனால் முனுசாமி ஏதாவது விரட்டி வேலை வாங்கினால்கூடச் சங்கரன் படித்து போய்க் கொண்டிருந்தான். முனுசாமி ஐந்து, பத்து என்று அடிக்கடி ரூபாய் கேட்டால்கூடச் சங்கரன் பேசாமல்

கையிலிருந்தால் கொடுத்து விடுவான். கையில் இல்லாவிட்டால் கடன்காரனுக்குப் பதில் சொல்லுவதுபோல் அப்புறம் தருவதாகக் கெஞ்சிக் கேட்டுக் கொள்வான். இப்படி ஏராளமாய் போதெல்லாம் பணம் சம்பாதிக்கும் இடத்திலிருந்து வேலையை விட்டுப் போக முனுசாமிக்கு என்ன தலையெழுத்து?

அப்பு இப்பொழுதெல்லாம் சங்கரன் வீட்டுக்கு வருவதே இல்லை. இதற்கு முக்கியமான காரணம் அவனுக்குப் பிரேமாவிடம் ஏற்பட்ட காதல் முறிந்து போனதுதான். பிரேமாவின் காதலைவிட அவனுக்கு முக்கியமாகப் பட்டது பணத்தின் மீது அவனுக்கு இருந்த காதல்தான். அதற்கு, பிரேமாவைக் காதல் வலையில் சிக்க வைத்தால் வரதட்சிணை மூலம் பணத்தைக் காணலாம் என்று சூழ்ச்சி செய்தான். அவனுடைய காதல் வித்தைதான் பிரேமாவிடம் பலிக்கவில்லையே? இந்தக் காதல் பலிக்காமல் போனால் போகிறது. சங்கரன் மீனுவிடம் காதல் கொண்டிருக்கிறானல்லவா? அது பணம் கறக்கும் பெரிய சாதனமல்லவா? அப்பு விரும்பிய தொகையை சங்கரன் எப்படியாவது சம்பாதித்துக் கொடுத்த பின் அவன் எதைப் பற்றிக் கவலைப்பட வேண்டும்? எதற்காகச் சங்கரன் வீட்டிற்கு வர வேண்டும்?

பிரேமாவுக்கும் டாக்டர் நீலகண்டனுக்கும் உள்ள காதல் இப்பொழுது உச்சநிலையில் இருந்தது. அதாவது பூ பிஞ்சாகி, பிஞ்சு காயாகி, காய் கனியக் கூடிய தறுவாயில் இருந்தது. முன்பெல்லாம் மணிக்கொரு தடவை வந்து கொண்டிருந்த நீலகண்டன் இப்பொழுது அரை மணிக்கு ஒரு தடவை வருவதிலிருந்து இது தெளிவாக விளங்கியது. இதனால் அந்தத் தெருவிலுள்ள விஷயமறிந்த வட்டாரத்தினர் பிரேமாவுக்கும் டாக்டருக்கும் உள்ள அந்தரங்கமான நட்பின் வேகத்தை ஒருவருக்கொருவர் அந்தரங்கமாகவே பேசிக் கொள்ளத் தலைப்பட்டனர். விஷயமறியாதவர்கள் 'பிரேமாவின் வீட்டில் யாருக்கோ ஏதோ நிரந்தரமான வியாதி; அதனால்தான் அடிக்கடி டாக்டர் வருகிறார்' என்று சொல்லிக் கொண்டனர்.

முனுசாமிக்கு அடிக்கடி டாக்டர் வருவது ஒரு விதத்தில் சௌகரியமாய்த்தானிருந்தது. இதற்குக் காரணம் அப்புவை விட டாக்டர் பண விஷயத்தில் தாராள நோக்குள்ளவராய் இருந்தது தான்.

'இனும் கொடுக்க' என்று அவன் வாயைத் திறந்து கேட்க வேண்டிய அவசியமே ஏற்படவில்லை. டாக்டரின் கார் வந்தவுடனேயே ஓடிப்போய்க் கதவைத் திறந்து விட்டுக் குனிந்து வளைந்து ஒரு கடைக் கும்பிடு போட்டு விட்டால் போதும்; டாக்டர் போகும்போது ஒரு ரூபாய், இரண்டு ரூபாய் முனுசாமிக்குக் கொடுக்காமல் போக மாட்டார். டாக்டர் முனுசாமிக்கு அடிக்கடி ஏதாவது பணம் கொடுப்



பதற்குக் காரணம் அவன் அந்த வீட்டில் நெடுநாளாய் வேலை செய்து கொண்டிருக்கும் நம்பிக்கையான வேலைக்காரனாகையால் அவனால் தன்னுடைய காதலுக்கு எவ்வித மான இடையூறும் சேர்ந்து விடக் கூடாது என்பதுதான்.

முனுசாமிக்கு வெகு நாட்களாகத் தான் ஒரு டாக்டராகி விட வேண்டு மென்ற ஆசை. அந்த ஆசை இந்த ஜன்மத்தில் நிறைவேறக் கூடியதல்ல என்று விட்டு விட்டான். இப்பொழுது அந்த ஆசை மறுபடியும் துளிர்விட்டது. அடிக்கடி அந்த வீட்டிற்கு வரும் டாக்டர் நீலகண்டனின் மூலம் அந்த ஆசை நிறைவேற வழி இருக்கலாமல்லவா? அவன் ஒரு டாக்டராகா விட்டாலும் ஒரு டாக்டருக்குக் கீழே கம்பௌண்டராகவாவது இருந்து நான்கு வகை மருந்துகளைத் தெரிந்து கொள்ளலாம். அப்படியே கொஞ்சம் கொஞ்சமாக ஒரு குட்டி டாக்டராகி விடலாம் என்ற அபிப் பிராயம் அவனுக்கு. தன் ஆசையை ஒரு நாள் பிரேமாவிடம் சொல்லி அவள் மூலமாக டாக்டரின் அபிமானத்தைப் பெறலாம் என்பது அவன் எண்ணம்.

பிரேமாவுக்கு டாக்டர் நீலகண்டனின் நட்பு ஏற்பட்டதிலிருந்து வீட்டிலுள்ள பீரோ நிறைய மருந்துகள் குவியலாயின. மாத்திரை, சூரணம், திராவகம், என்று பலவகையான மருந்துகள் விதவிதமான புட்டிகளிலும் டப்பிகளிலும் இருந்து பீரோவை அழகுப்படுத்திக் கொண்டிருந்தன. பிரேமாவும் அடிக்கடி ஏதாவது மருந்து சாப் பிட்டுக்கொண்டேதா னிருந்தாள். அவள் வாங்கி வைத்திருக்கும் மருந்துகளில் எது தலைவலிக்கு, எது ஜலதோஷத்திற்கு, எது வயிற்று வலிக்கு என்று முனுசாமிக்கு நன்றாய்த் தெரியும். அநேகமாக அவன் இப்பொழுது பத்துப் பன்னிரண்டு வகை மருந்துகளைத் தெரிந்து கொண்டிருந்தான். டாக்டராக வேண்டுமென்றால் இன்னும் சில வகை மருந்துகளைத் தெரிந்து கொண்டால் போதும் என்பது அவன் அபிப்பிராயம்.

அன்று காலை பிரேமாவுக்குத் தலைவலி வரும் போலிருந்தது. முனுசாமியிடம் பீரோவிலிருந்து ஒரு தலைவலி மாத்திரை எடுத்துக் கொடு என்று உத்தரவிட்டாள். முனுசாமிக்குத் தன் ஆசையைச் சொல்லி விட அதுதான் சரியான சந்தர்ப்பமாகப் பட்டது. தலைவலி மாத்திரையை எடுத்து அவளிடம் கொடுத்துக் கொண்டே, "எனக்கு இந்த டாக்டருங்களைக் கண்டாலே ஒரு ஆசை!" என்றான் மெதுவாக.

பிரேமா சிரித்துக் கொண்டே, "ஏன்?" என்றாள்.

"வியாதியைச் சொஸ்தப் படுத்தி ஒருத்தரைப் பிழைக்க வைக்க முடியாவிட்டாலும் ஒருத்தரைச் சாக அடிக்கணும்னு அவங்களாலே முடியும், பாருங்க!" என்றான்.

பிரேமா இதைக் கேட்டதும் திடுக்கிட்டு, "நீ தவறாக நினைக்கிறாய்; நம்ம டாக்டர் அப்படி இல்லை. இதுவரையில் இவர் எடுத்துக் கொண்ட கேஸில் ஒன்றைக் கூடத் தவற விட்டதில்லையாம்!" என்றாள்.

"எனக்குத் தெரியாதுங்களா? நம்ம டாக்டர் எப்படித் தவற விடுவாரு? பொதுவாக உங்க கேஸையே சொல்லுறங்க. இதைத் தவற விடுகிறதாயிருந்தால் அவர் மணிக்கு ஒரு தடவை வந்து பார்ப்பாரா?" என்றான் முனுசாமி.

பிரேமா பெருமையோடு சிரித்துக் கொண்டே தலைவலி மாத்திரையை விழுங்கினாள்.

"எனக்கு நெடுநாளாய் ஒரு ஆசை......" என்று கையைப் பிசைந்து கொண்டே நின்றான் முனுசாமி.

"என்ன?" என்றாள் பிரேமா.

"நானும் ஒரு டாக்டராகிடலா மான்னு......"

இதைக் கேட்டதும் பிரேமாவுக்கு மறுபடியும் ஒரு தடவை தூக்கி வாரிப்போட்டது. "நீயும் ஒரு டாக்டராகணும்னு ஆசையா? அது லேசில் முடியுமா?" என்றாள் பிரேமா, கேலியாகச் சிரித்துக் கொண்டே.

"எல்லாம் உங்க தயவிருந்தால் லேசாக முடிந்து போயிடும். முதல்லே டாக்டராக முடியாவிட்டாலும் ஒரு கம்பௌண்டர் வேலைக்காவது டாக்டர் ஐயா கிட்டே சிபார்சு செய்யுங்க; போதும்! பின்னாலே நானே டாக்டரா வந்துப் பிடுவேன்!" என்றான்.

"கம்பௌண்டர் வேலையா......? பார்க்கலாம். ஆனால் நீ பின்னால் எப்படி டாக்டராக முடியும்?"

"எல்லாம் முடியும். கறுப்பு மருந்து கொடுன்னு கறுப்பு மருந்து கொடுக்கிறேன். சிவப்பு மருந்து கொடுன்னு சிவப்பு மருந்து கொடுக்கிறேன். சிவப்பையும் கருப்பையும் கலந்து கொடுன்னு கொடுக்கிறேன்! இப்படியே கொஞ்சம் கொஞ்சமாகத் தெரிஞ்சுக்

விட்டா கடையிலே தானே சொந்தமாகக் கறுப்பு மருந்தோ, சிவப்பு மருந்தோ, எதையோ கொடுக்கத் தெரிஞ்சுக்கிறுவேன்!" என்றான்.

பிரேமா சிரித்துக் கொண்டே "டாக்டர் வரட்டும், கேட்டுச் சொல்லுகிறேன்" என்றாள். அவள் இப்படிச் சொல்லி வாய் மூடு முன்னால் டாக்டரின் கார் அந்த வீட்டு வாசலில் வந்து நிற்கும் சத்தம் கேட்டது.

முனுசாமி "இதோ, அவரே வந்துட்டாரே!" என்று சொல்லிக் கொண்டு ஓடினான்.

டாக்டர், பிரேமா இருந்த அறைக்குள் நுழைந்தார். முனுசாமி அவருக்குப் பின்னால் வந்து அசட்டுச் சிரிப்புடன் கையைக் கட்டிக்கொண்டு நின்றான். அங்கிருந்த நாற்காலியில் அமர்ந்து முனுசாமியைப் பார்த்தார். உடனே பிரேமா டாக்டரைப் பார்த்து, "முனுசாமி ரொம்ப நல்லவன்; ரொம்ப கெட்டிக்காரன். அவன் ரொம்ப நாளாய் இந்த வீட்டில் வேலை செய்து கொண்டிருக்கிறான் என்று உங்களிடம் சொல்லியிருக்கிறேனே......!" என்றாள்.

"முனுசாமியைப் பற்றி நிறையச் சொல்லி இருக்கிறாயே! எனக்குத் தெரியுமே.....!" என்றார் டாக்டர்.

"எஜமானுக்குத் தெரியாததா?" என்றான் முனுசாமி அசட்டுச் சிரிப்புடன்.

"அவனுக்கு உங்களால் ஒரு காரியம் ஆகவேண்டும்" என்றாள் பிரேமா.

"என்னால் ஒரு காரியம் ஆகவேண்டுமா? என்ன?"

"அவனுக்கு ரொம்ப நாளாக டாக்டராய்ப் போகணும்னு ஆசையாம்..."

இதைக் கேட்டதும் டாக்டர் திடுக்கிட்டார். "இது பொல்லாத ஆசையாய் இருக்கே? இந்தப் பழிகார ஆசை உனக்கு எதற்கு அப்பா?" என்றார், முனுசாமியைப் பார்த்து.

"ஏதோ நாலு மருந்தைக் கொடுக்கக் காலும் தெரிஞ்சுக்கிட்டா ஊர் ஜனங்களுக்கு உபகாரமாய் இருக்குமேன்னுதான்!" என்றான் முனுசாமி மெதுவாக.

"அவன் ஆசையை நாம் என்ன செய்ய முடியும்? அவன் திடமென்று இப்பொழுதே டாக்டராக முடியாவிட்டாலும் உங்களிடம் கொஞ்ச நாள் கம்பௌண்டராக இருக்கிறேன் என்று சொல்லுகிறான். அவன் ரொம்பக் கெட்டிக்காரன்—ரொம்பச் சூடிகை!" என்றாள் பிரேமா.



நீதிபதி :—நீ திருடினாயா, இல்லையா? சொல்லு!

குற்றவாளி :—நான் திருடினேனா, இல்லையா என்பதை விசாரித்துத் தீர்ப்புக் கூறத்தானே ஸார், நாம் இங்கே கூடியிருக்கிறோம்?

டாக்டர் சிறிது நேரம் யோசனை செய்தார். பிறகு விளையாட்டாய்ச் சிரித்துக் கொண்டே "கம்பௌண்டராயிருப்பதும் சுலபமாய் இல்லை. இருந்தாலும் முனுசாமி என்னிடம் இருக்கட்டும். சில ஆபரேஷன் கேஸ்கள் வருகிறபோது பக்கத்திலிருந்து கட்டுக் கட்டவும், எதையாவது எடுத்துக் கொண்டு வரச் சொல்லவும் சௌகரியமாய் இருக்கும். அதுவும் 'கம்பௌண்டர்' வேலைதான்!" என்றார்.

"அதுவும் சரிதான், எஜமான்! உங்களுக்கு எதையாவது ஆபரேஷன் செய்யத் துணிச்சல் இல்லாட்டா என்னிடம் கத்தியைக் கொடுத்தீங்கன்னா வெட்டித் தள்ளிப்பிடுவேன்!" என்றான் முனுசாமி.

டாக்டர் சிரித்துக்கொண்டே "அப்படித்தான் ஒரு ஆளைத் தேடிக்கொண்டிருந்தேன். நல்ல வேளை, நீ அகப்பட்டாய்! அடுத்த மாதத்திலிருந்து நீ வேலையை ஒப்புக் கொள்ளலாம்" என்று சொல்லிப் பிரேமாவைப் பார்த்தார்.

பிரேமா அவருடைய பார்வையிலேயே விஷயத்தை ஊகித்துக் கொண்டவளாய், "சரி, முனுசாமி! உன் பாடு அதிருஷ்டம் தான். நீ கீழே ஏதாவது வேலை இருந்தால் கவனி; போ!" என்றாள்.

முனுசாமியும் தெளிவடைந்தவனாய், "என் அதிருஷ்டம் கிடக்குது. உங்க அதிருஷ்டம் ஐயா கிடைச்சாரே? நீங்க எப்படியாவது கல்யாணம் செய்துக்கிட்டுக் கண்ணும் கருத்துமாய் இருந்தால் இந்த ஏழைக்கு என்ன குறைச்சல்?" என்று சொல்லிவிட்டுப் போனான். (தொடரும்)

## நீங்கள் உங்கள் பற்களை

# இன்று **மக்ளீன்** செய்தீர்களா?



வருஷக் கணக்காக நான் மக்ளீன்ஸ் உபயோகித்து வருகிறேன். என் பற்கள் அழகாகவும் வெண்மையாகவும் இருக்கின்றன. நான் வேறு எந்த டூத் பேஸ்டும் உபயோகிக்கமாட்டேன்.

வாயைச் சுத்திகரித்து
மூச்சின் நாற்றத்தை
போக்குகிறது

உமிழ்நீர்
கெடுதலைத் தடுத்து
ஈறுகளைப் பாதுகாக்கிறது.

மேலே உள்ள கறைகளை அகற்றி
பற்களுக்கு
வெண்மை
தருகிறது

பளபளப்பாகவும் கவர்ச்சிகரமாகவும் தோன்றும பற்களே அனைவரும் விரும்புவது. அத்துடன் அதிகமான சுத்தமும் பாதுகாப்பும் தரத் தக்கதுமான டூத்பேஸ்ட் உங்களுக்கு வேண்டுமானால் மக்ளீன்ஸ் பெராக்ஸைட் டூத் பேஸ்டையே உபயோகியுங்கள்.

பிரத்யேகமானதும் பிறர் பின்பற்ற முடியாததுமான தயாரிப்பு இது. வாயின் ஈறுகள் உமிழ்நீர் மூலம் பல் சொத்தை பிடிப்பதையும் பல்மேல் பாசி படருவதையும் மக்ளீன் தடுத்து உதவுகிறது. பல்லின்மீது விகாரமான கறை படிந்திருந்தால் அதை அகற்றிவிடும். பற்களை வெண்மையாக்கி, பளபளக்கச் செய்து வாசத்தை சுத்தமுடையதாக்குகிறது.

**இன்றே மக்ளீன்ஸ் வாங்குங்கள்!**



MACLEANS PEROXIDE TOOTH PASTE

# லலிதா பரிணயம்

அம்புஜம்

கடைத் தெரு வழியாக ஜட்கா போய்க் கொண்டிருந்தது. வரிசையாக இருந்த பழக்கடைகளைப் பார்த்தபோது, தன் அக்காவின் குழந்தைகளுக்கு ஒன்றும் வாங்கி வரவில்லை என்பது ராமுவுக்கு நினைவு வந்தது. உடனே வண்டியை நிறுத்தச் சொல்லிக் கொஞ்சம் பழங்கள் வாங்கிக் கொண்டான். அவன் ரயிலில் வரும்போது ஸ்டேஷனுக்கு ஸ்டேஷன் எத்தனையோ விநோதப் பொருள்கள் விற்கப்படுவதைப் பார்த்தான். அதை ஒன்றும் வாங்காமல் போனோமே என்று தன்னை நொந்து கொண்டான். "ஹூம், அந்தப் பெண்கள் அடித்த கொட்டத்தில் விளையாட்டுச் சாமான் வாங்கத் தவறியது பெரிய தவறா? நான் இறங்க வேண்டிய ஸ்டேஷனைத் தவறி விடாமல் இருந்தேனே, அதுவே, பெரிய காரியம்!" என்று பிறகு சமாதானம் செய்து கொண்டான்.

ஜட்கா வீட்டு வாசலில் நின்றது. வாசலில் நின்றிருந்த குழந்தைகள் "மாமா வந்து விட்டார்!" என்று கூப்பாடு போட்டுக் கொண்டு உள்ளே ஓடினர். அவனுடைய அக்காளும் அவள் கணவனும் அவனை வரவேற்க வாசலுக்கு வந்தனர்.

காப்பி, பலகாரம், யோக க்ஷேம விசாரணை எல்லாம் முடிந்தன. அவனுடைய அத்திம்பேர் வெளியே சென்றதும், தன் தம்பியை வரவழைத்ததே இந்த விஷயத்திற்காகத்தான் என்பது போல் சாரதா அவன் விவாகத்தைப் பற்றிப் பேச ஆரம்பித்தாள். "உன் கல்யாணத்தைப் பற்றி ஏதாவது முடிவுக்கு வந்தாயா?" என்றாள்.

"என் கல்யாணத்திற்கு நீதான் ரொம்ப அவசரப்படுகிறாய்!" என்றான் ராமு.

"அவசரப்படாமல் முடியுமா? அப்பாவும் அம்மாவும் என்னிடம்தானே உன் பொறுப்பை விட்டுவிட்டுப் போயிருக்கிறார்கள். தவிர, உனக்கு மட்டும் என்ன, வயது கொஞ்சம்தான் என்கிற எண்ணமோ? இருபத்தெட்டு முடிந்து விட்டது; நினைவிருக்கட்டும்!" என்றாள் சாரதா.

"சரி; ஆனால் நம் சரளாவுக்குப் பதினான்கு வயதுகூட ஆகவில்லையே, அக்கா!" என்றான் ராமு கேலியாக.

"போங்கோ, மாமா!" என்று அழகு காட்டினாள் அவனுடைய பத்து வயது மருமாள்.

சாரதாவுக்குக் கோபம் வந்து விட்டது. ரோசத்துடன், "என் பெண்ணுக்காக நான் பேசவில்லை!" என்றாள்.

"கல்யாணத்தைப் பற்றி நினைக்க நினைக்க எனக்குக் குழப்பம்தான் உண்டாகிறது. கர்வமும் ஆடம்பரமும் இல்லாத படித்த பெண் வேண்டும். ஆனால் படித்த பெண்கள் என்றாலே அடக்கம் இல்லாதவர்களாகவும் கர்வம் பிடித்தவர்களாகவுமே இருக்கிறார்கள்!" என்றான் ராமு.

"படித்த பெண்களிடம் உனக்கு இருந்த வெறுப்பு இன்னும் தீரவில்லையா?" என்று கேட்ட சாரதா, அவர்களுக்காகப் பரிந்து கொண்டு வந்ததைக் கண்ட ராமுவுக்கு ஆத்திரம் வந்து விட்டது. ரயிலில் நேர்ந்த சம்பவங்களின் உஷ்ணம் இன்னும் ஆறவில்லையே!

"நேற்று என்னுடன் ரயிலில் பிரயாணம் செய்த பெண்களை நீ பார்த்திருக்க வேண்டும். படித்த பெண்களாம், இவர்கள்! ஆங்கிலத்தில் பேசிவிட்டால் போதுமா? நாகரிகமான நடத்தையும் அடக்கமான சுபாவமும் வேண்டாமா? என்னையும் வேறு இரண்டு ஆண் பிள்ளைகளையும் தவிர அந்தப் பெரிய 'கம்பார்ட்மெண்ட்' முழுவதும் பெண்கள். அப்பப்பா, அவர்கள் அடித்த கொட்டம்! வண்டியில் ஏற வந்தவர்களை இவர்கள் விரட்டியதையும், அவர்கள் போனவுடன் இவர்கள் அட்டகாசமாகச் சிரித்ததையும் பார்க்க வேண்டுமே! இந்தப் பெண்கள் தங்களுக்கென்று இருக்கும் பெண்கள் வண்டியில் ஏறினால் என்ன? அதில் ஏறினால் நாட்டுப்புறப் பெண்களுடன் பிரயாணம் செய்ய வேண்டுமே என்ற கசப்பு போலிருக்கிறது! இரண்டு மூன்று ஆண் பிள்ளைகள் இருக்கிறார்களே என்ற எண்ணமே இல்லாமல் என்னவெல்லாம் பேசினார்கள்! காலேஜ் கல்வி இவர்களுக்குக் கற்றுக் கொடுத்தது மரியாதையும் அடக்கமும் அல்ல. ஆடம்பரமாக உடை அணிவது, அடக்கம் இல்லாமல் கத்துவது, காலேஜ் படிப்பு இல்லாத மற்ற பெண்களை அவமதிப்பது—இதெல்லாம்தான்!"

"ஏதோ சில அதிகப் பிரசங்கிப் பெண்களைப் பார்த்துவிட்டு, 'படித்த பெண்களே மோசம்' என்று நிச்சயித்து விடுகிறாய்; நம் லலிதாவை நீ பார்த்தால்......"

"அது யார், லலிதா?" என்று குறுக்கிட்டுக் கேட்டான் ராமு.

"அவள்தான்; அத்திம்பேரின் ஒன்று விட்ட மருமாள். உன்னிடம் எத்தனையோ தடவை அவளைப் பற்றிச் சொல்லியிருக்கிறேன். மறந்து விட்டாய் போலிருக்கிறது! அவளுடைய படிப்பு இந்த வருஷத்துடன் முடிகிறது. படிப்பு முடிந்த

தும் இல்லறத்தில் ஈடுபட வேண்டும் என்பதுதான் அவள் விருப்பம். அவளுக்கு விவாகம் செய்து விட்டால் எங்கள் பொறுப்பும் நீங்கி விடும். பணத்தைப் பற்றிக் கவலை இல்லை. அவள் கல்யாணத்திற்கு வேண்டிய பணத்தை அவள் அப்பா வைத்து விட்டுப் போயிருக்கிறார். தகுந்த வரன் கிடைக்க வேண்டுமே என்ற கவலைதான்!''

"அந்தக் கவலை தீருவதற்காகத்தான் என்னைப் பிடித்தாயாக்கும்?''

"என் கவலையைத் தீர்ப்பதற்காக நீ அவளை மணக்க வேண்டாம். நீ விரும்புகிற அடக்கம் அவளிடம் இருக்கிறது. நல்ல குணம்......'' என்று லலிதாவை வர்ணிக்க ஆரம்பித்தாள் சாரதா.

"இப்போது ஞாபகம் வருகிறது. சின்ன வயதிலிருந்தே ஹாஸ்டலில் இருந்து படிக்கிறாளே, அவள்தானே? கேட்கவே வேண்டாம்; குணக்குன்றாகத்தான் இருப்பாள்!'' என்றான் ராமு கேலியாக.

"நேரில் பார்க்காமல் யாரைப் பற்றியும் ஒன்றும் நிச்சயமாகச் சொல்லி விடக் கூடாது, ராமு! ஹாஸ்டலில் இருந்தால் என்ன? வீட்டில் கவனித்துக் கொள்ளத் தாயார் இல்லை; தம்முடைய வேலையும் ஊர் சுற்றும் வேலை என்பதற்காக லலிதாவின் தகப்பனார் அவளை ஹாஸ்டலில் சேர்த்தார். ஏதோ சில பெண்களைப் பார்த்து விட்டு, 'காலேஜ் பெண்களே மோசம்' என்று முடிவு கட்டி விடாதே! கல்வி




ஒருபோதும் கெடுதலை உண்டு பண்ணாது; நன்மையைத்தான் உண்டு பண்ணும்'' என்று பொரிந்து கொட்டினாள் சாரதா.

"இந்தப் பெண்கள் மட்டும் அல்ல; நான் பார்த்த படித்த பெண்கள் எல்லோருமே மோசமாகத்தான் இருக்கிறார்கள். கல்வி அவர்களைப் பெண்மையின் குணங்களற்றவர்களாகத்தான் செய்திருக்கிறது!'' என்றான் ராமுவும் விடாமல்.

"எனக்கு உன்னுடன் வாதாடத் தெரியாது. லலிதாவைப் பார்த்தபின் உன் அபிப்பிராயத்தைச் சொல்லு. அவளும் இன்னும் நாலைந்து நாட்களில் இங்கே வந்து விடுவாள்!'' என்று சற்றுக் கடுமையாகவே சொல்லிவிட்டு, அந்தச் சம்பாஷணைக்கு முற்றுப்புள்ளி வைத்தாள் சாரதா.

*
* *

லலிதா எப்போது வருவாள் என்று நாட்களை எண்ணிக் கொண்டிருந்தன குழந்தைகள். சாரதாகூடத்தான் லலிதாவின் வரவை ஆவலுடன் எதிர்பார்த்தாள். "அவள் வந்தால் கூட மாட ஒத்தாசையாக இருப்பாள்!'' என்று சொல்லிக் கொண்டிருந்த அவள் லலிதா வருவதற்கு இரண்டு நாட்கள் இருக்கும்போது காய்ச்சலில் படுத்து விட்டாள்.

அன்று காலையில் வீட்டில் ஒரே தடபுடல். சாரதாவின் கணவர் ஸ்டேஷனுக்குப் புறப்பட்டார். குழந்தைகள் சுத்தமாக உடை அணிந்து வாசலில் நின்று கொண்டிருந்தனர். சாரதா முக்கி முனகிக் கொண்டு வீட்டு வேலைக்காரியிடம் ஏதோ சொல்லிக் கொண்டிருந்தாள்:

"குழந்தை வந்ததும் வராததுமாக வீட்டு வேலையை ஏற்றுக் கொள்ளும்படி நான் படுத்துக் கொண்டு விட்டேனே! வந்ததும் குடிக்க ஒரு டம்ளர் காப்பியாவது கொடுக்க வேண்டாமா? ஹோட்டலிலிருந்து காப்பியும் டிபனும் வாங்கிக் கொண்டு வா!'' என்று அவள் சொன்னது ராமுவின் காதில் விழுந்தது.

"அடபாடா! அந்தக் காலேஜ் குமாரியை வரவேற்க இத்தனை ஆர்ப்பாட்டமா!'' என்று நினைத்தான் ராமு. அந்தச் சமயம் அவனிடம் ஒரு விதப் பொறாமை உண்டாயிற்று அவனுக்கு கடைக்குட்டி வத்ஸலாகூட லலிதாவைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தது அவனுக்கு எரிச்சலை உண்டு பண்ணியது.

சற்று நேரத்திற்கெல்லாம் வாசலில் ஒரு ஜட்கா வந்து நின்றது. குழந்தைகள் ஓடிப்போய்ச் சூழ்ந்து கொண்டனர். ராமு மாடியிலிருந்தே கவனித்துக் கொண்டிருந்தான். வத்ஸலாவைத் தூக்கிக் கொண்டு அந்தக் காலேஜ் குமாரி உள்ளே பிரவே

சித்தான். வீட்டு வேலைக்காரியும் மற்ற குடித்தனக்காரர்களும் அவ்வளவு ஆதரவுடன் வரவேற்க லலிதாவிடம் என்ன தான் கவர்ச்சி இருக்கிறதோ என்று வியந்தான் ராமு.

காப்பி சாப்பிட நேரமாகியும் அவன் கீழே இறங்கவில்லை. எல்லோரும் லலிதாவையே சுற்றிக் கொண்டு அவளுடன் அளவளாவும் போது அவர்கள் எதிரில் நிற்க அவனுக்கு வெட்கமாக இருந்தது. ஓசைப்படாமல் நழுவி வெளியே போய் விட்டான்.



அவன் வீட்டுக்குத் திரும்பும்போது மணி பன்னிரண்டு ஆகிவிட்டது. சமையலறையில் ஒரே இரைச்சலாக இருந்தது. மெள்ளப் போய் எட்டிப் பார்த்தான். வாசற்படியில் உட்கார்ந்திருந்த சாரதா தலையை அமுக்கிப் பிடித்துக் கொண்டு ஏதோ பேசிக் கொண்டிருந்தாள். அவனைக் கண்டதும், "வா, ராமு, காப்பி கூடச் சாப்பிடாமல் எங்கே போய் விட்டாய்? சரி, சாப்பிட உட்கார்; நாழியாகி விட்டது!" என்றாள்.

லலிதாதான் ராமுவுக்கும் பரிமாறினாள். சமையல் விருந்துச் சமையலாக இருக்கவே, "இன்று என்ன விசேஷம்?" என்று கேட்டான் ராமு.

"இன்று வெங்கிட்டுவின் பிறந்த நாள். நான் அதை மறந்தே போய்விட்டேன்; லலிதாதான் ஞாபகமூட்டினாள்!" என்றாள் சாரதா.

"ஏன் ராமு, பகல் சாப்பாட்டிற்கு நான் சப்பாத்தி பண்ணினால் இவர்கள் எல்லாம் என்ன பாடு படுத்துவார்கள், தெரியுமோ? ஒருத்தி முகத்தைச் சுளிப்பாள்; இன்னொருத்தன் முணுமுணுப்பான். இன்று லலிதா ரொட்டி பண்ணியிருக்கிறாள்; இவர்கள் வேறொன்றையும் தொடாமல் போட்டி போட்டுக் கொண்டு அதையே தின்கிறார்கள்" என்றாள் சாரதா.

"எதையும் பண்ணுகிற விதத்தில் பண்ணினால் நன்றாயிருக்கும். அத்தங்கா எவ்வளவு நன்றாய்ப் பண்ணியிருக்கிறாள்!" என்றாள் சரஸா.

"என்னுடைய மராட்டி சிநேகிதன் வீட்டிற்குப் போனால் அவன் அம்மா எனக்கு ரொட்டி தருவாள். 'நம் அம்மாவுக்கு இவ்வளவு நன்றாய் ரொட்டி பண்ணத் தெரியவில்லையே' என்று நினைப்பேன். இது அவர்கள் வீட்டு ரொட்டி மாதிரியே இருக்கிறது!" என்றான் வெங்கிட்டு.

"ஏதேது, எனக்கு 'ஸர்டிபிகேட்'டுகளுக்குக் குறைவு இல்லைபோலிருக்கிறதே!" என்று சிரித்தாள் லலிதா.

ராமு அவளை நிமிர்ந்து பார்த்தான். அவளுடைய சமையல் திறமையும் கலகலப்பான பேச்சும்தான் அவனை அப்படிச் செய்யத் தூண்டின. பிரமாதமான அழகு இல்லாவிட்டாலும் அவள் கச்சிதமாகச் செய்து கொண்டிருந்த அலங்காரம் அவள் முகத்தில் ஒரு கவர்ச்சியை உண்டு பண்ணியிருந்தது. வடக்கத்தி சினிமா நடிகைகளைப்போல் தலைமயிரைச் சுருட்டி மடித்து வாரி விட்டுக் கொண்டிருந்தாள்.

"பெண்கள் அலங்காரம் செய்து கொள்வது, அது அவர்கள் சுபாவத்தைப் பாதிக்காத வரையில் தப்பில்லைதான்!" என்று நினைத்துக் கொண்டான் ராமு.

"அத்தங்கா, காலேஜில் படித்துக் கொண்டு இந்தச் சமையல் வேலையை எப்படி நீ கற்றுக் கொண்டாய்?" என்று கேட்டாள் சரஸா.

"காலேஜில் படித்தால் சமைக்கக் கூடாதா? நாங்கள் நாலைந்து பேர் சேர்ந்து லீவு நாட்களில் முறை வைத்துக் கொண்டு சமையல் செய்வோம். எந்தத் தானியத்தால் என்ன பக்ஷணம் பண்ணலாம், சமையலில் புது முறைகள் எதையெல்லாம் புகுத்தலாம் என்று 'எக்ஸ்பெரிமெண்ட்' பண்ணிப் பார்ப்போம். அந்தப் பழக்கம்தான்!" என்றாள் லலிதா

•
• •

அன்று பகல் முழுவதும் ராமுவால் தன் அக்காளைப் பார்த்துப் பேசவே முடியவில்லை. சாரதாவும் லலிதாவும் மும்முரமாகப் பேசித் தீர்த்துக் கொண்டிருந்தார்கள். மாடியில் உட்கார்ந்திருந்த அவனுக்கு அவர்கள் எதைப் பற்றிப் பேசிக் கொள்கிறார்கள் என்பது தெரியவில்லை என்றாலும், லலிதாவின் குரல் கேட்கும் போது நெஞ்சு படபடவென்று அடித்துக் கொள்ள ஆரம்பித்தது. அவனுக்கு அது ஆச்சரியமாகவும் அவமானமாகவும் இருந்தது. கடைசியில் அந்தப் பெண்ணின் முன்னால் தான் தோற்றுவிட நேருமோ என்று ராமு பயந்தான்.

ஆனால் தோல்வியும் பயமும் எதற்கு? அவன் லட்சியப் பெண்ணிடம் எதிர் பார்க்கும் குணங்களில் அநேகம் லலிதாவிடம் இருக்கின்றனவே! படித்திருக்கிறாள், மரியாதையாக நடந்து கொள்கிறாள். பெண்களின் முக்கிய வேலையான சமையலில் அவளுக்குச் சிரத்தை இருக்கிறது. அவளது கலகலப்பான பேச்சு வீட்டையே இன்பத்தால் நிறைத்து விடும்போலிருக்கிறதே! எல்லாவற்றிற்கும் மேலாக அறிவு தந்த அடக்கம் அவளிடம் இருக்கிறது. அவன் எதிர் பார்த்த குணங்கள் அவளிடம் இருக்கும் போது, அவன் மனது அவள் வசப்பட்டு விட்டதைத் தோல்வி என்று எப்படிச் சொல்ல முடியும்?

ஆனால், அன்று மாலை அவன் அக்கா அவனிடம் லலிதாவைப் பற்றி அபிப்பிராயம் கேட்டபோது, தன் மனதிலுள்ளதை அவனால் உடனே சொல்ல முடியவில்லை. "ஒரு நாளில் பார்த்தால் என்ன தெரியும்? இன்னும் கொஞ்ச நாள் போகட்டுமே!" என்று சொல்லித் தட்டிக் கழிக்கப் பார்த்தான். ஆனால் சாரதா விடவில்லை. "உன் முகத்தைப் பார்த்தாலே தெரிகிறதே, சம்மதந்தானென்று! அதைச் சொல்ல நாளைக்கு ஏன் ஒத்திப் போடுகிறாய்?" என்று கேலி செய்தாள் அவள்.

அன்றிரவு மாடியில் நிலவில் அந்தக் கேலியை நினைத்துப் பார்த்தபோது அவனுக்கு அலாதி பரவசம் உண்டாயிற்று. கீழேயிருந்த லலிதாவின் இனிய பேச்சுக் குரலும் கலகலவென்ற சிரிப்பொலியும் இப்போது அவன் காதுக்கு அமுதமாகவே இருந்தன.

இந்த அனுபவங்களுடன் தூங்கிய அவனை மறுநாள் காலையில்,

"தோடுடைய செவியன் விடையேறி ஓர்
தூவெண் மதி சூடி ......"

என்ற தேவாரப் பாட்டு எழுப்பியது. அவன் எழுந்து போய்க் கீழே எட்டிப் பார்த்தான். ஈரத்தலைமயிரைக் 'கோடாலி முடிக்க' போட்டுக் கொண்டு லலிதா கிணற்றில் ஜலம் மொண்டு கொண்டிருந்தாள். மங்கிய காலைப் பொழுதில் அவளைப் பார்த்தவுடன் ராமு நிச்சயம் செய்து கொண்டான் — "நான் கனவுகண்ட லட்சியப் பெண் இவள்தான்" என்று.

## இதிலும் நவீனம்



# கலி தீர்ந்தது!

நா. ஜ.

**வீ**டு வாசல்களை எல்லாம் மறந்து விட்டு, உடைகளை எல்லாம் அப்படியே போட்டுவிட்டு, எப்படியோ தப்பிப் பிழைத்து, சமையற்காரி வேலையில் இருந்து வந்த குமுதத்திற்கு அந்தச் செய்தி பேரிடியாகத்தா னிருந்தது. அவ ளால் நினைத்துப் பார்க்கவும் முடியவில்லை. அவ்வளவு கேவலமான குற்றச்சாட்டு அவள்மீது சுமத்தப்பட்டது. ஏற்கெனவே அனுபவித்த துக்கங்கள் போதாதென்று தானோ என்னவோ, மேலும் ஒரு துக்கம் அவளைத் தேடிவந்தது. அந்த வீட்டு எசமானியின் வைர நெக்லேஸ் காணாமற் போய்விட்டால், அந்தக் குற்றம் குமுதத் தையா சேரவேண்டும்? எப்படியும் அந்த நெக்லேஸை ஒரு வாரத்திற்குள் கொண்டு வந்து வைக்காவிட்டால், போலீஸுக்குத் தெரியப்படுத்திவிடுவதாகக் கூறியதைக் கேட்டுக் குமுதத்தின் நெஞ்சு குமுறியது. அவள் என்ன, பரம்பரைத் திருடியா? அவள் வாழ்ந்த வாழ்வென்ன? இன்று இருக்கும் நிலை என்ன? கேவலம் மானத்தை மறந்து, சமையற்காரியாக ஆனாற்கூட, திருடியாகவும் ஆக வேண்டி நேர்ந்ததே! எப்படி ஒரு வாரத்திற்குள் வைர நெக்லேஸை மீட்க முடியும்? அவளிடம் செல்லாத காசு கிடையாதே...!

★

**கு**முதம், வட இந்தியாவில் வசித்து வந்த பல தமிழ்க் குடும்பங்களில் ஒன்றில் பிறந்து, ஒரு சுமாரான பணக்காரனுக்கு வாழ்க்கைப் பட்டு, சுகமாக வாழ்ந்து வந்தாள். கல்யாணம் ஆகிச் சில மாதங் களுக்குள் வகுப்புக் கலவரங்கள் ஏற் பட்டதன் பலனாக, வீடுவாசல்களை விட்டு விட்டு ஓடிவந்த பல அகதிகளில் ஒருத்தி யாக ஆனாள். குடும்பமாகப் புறப்பட்ட தில் அவள் ஒருத்திதான் மிஞ்சினாள். கணவன் எங்கோ ஒருபுறம்; தாய் வழியிலேயே மரணமடைந்தாள்; தகப்பனார் மற்றொரு புறம்—இப்படிக் குடும்பம் சிதறிச் சின்ன பின்ன மாகியது. இருபது வயது நிரம் பாத அவள் என்ன செய்வதென்று அறிய முடியாமல், பலவிதமான கஷ்டங்களையும் அனுபவித்துவிட்டுக் கடைசியில் ஒரு வழி யாகச் சென்னை வந்து சேர்ந்தாள். சென்னை யில் ஒரு பெரிய உத்தியோகஸ்தரின் வீட்டில் சமையல் செய்யும் வேலையை மிகவும் சிரமப்பட்டு அடைந்தாள்.

துக்கங்களை எல்லாம் ஒரு வழியாக மறந்து விட்டு, ஏதோ வசித்துவந்த அவளை மேலும் சோதனை செய்யத்தானோ என்னவோ, அந்த எசமானியின் வைர நெக்லேஸ் காணாமற் போய்விட்டது. பல ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள அதன் மீது, தன் உயிரையே வைத்திருந்தாள் அந்த எசமானியம்மாள். கழற்றி வைத்து விட்டு மறுபடியும் அணிந்து கொள்வதற் குள் அந்த அறைக்குச் சென்றாள் குமுதம். அதுதான் அவள் செய்த குற்றம். உள்ளே சென்றது உண்மைதான். ஆனால் அவள் திருடினாள் என்று அதனாலேயே எப்படிச் சொல்லிவிட முடியும்? குமுதம் எவ் வளவோ கெஞ்சிப் பார்த்தாள். தான் இருந்த நிலையைக் கூறினாள். தான் திருடு வதைக் கனவிலும் கருதியதில்லை என்றாள். ஆனால் அந்த வீட்டு எசமானியம்மாளோ ஒன்றையும் காதில் வாங்கிக் கொள்ளாமல், நெக்லேஸைக் கொண்டு வந்து வைத்தால் தானுச்சு என்று பிடிவாதமாகக் கூறினாள். குமுதத்திற்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. இதே கவலையாலும், பல விதமான எண்ணங்களை நினைத்துக் கொண்டும் குமுதம் மிகவும் இளைத்து விட்டாள். அவளால் உழைக்க முடிய வில்லை; மூச்சைப் பிடித்துக் கொண்டு தன்னாலானவரை முயன்றுதான் வேலை செய்து வந்தாள்.

குமுதத்திற்கு மற்றொரு கவலையும் பிடித்துக் கொண்டது. யாரோ ஓர் இளம் மனிதன் அவள் வெளியே செல்லும்போ தெல்லாம் அவளையே பின்பற்றி வர ஆரம்பித்தான். அவனை அதட்டிக் கேட் கவும் தைரியமில்லை. இந்தப் பொல்லாத உலகில் ஆண்களின் வெறி தாண்டவ மாடும்வரையில், அவள் போன்ற பெண்கள் கற்பைக் காத்து வாழ்வது கடினந்தான் என்று எண்ணினாள். ஒருநாள் கோயிலுக் குப் போய்விட்டுத் திரும்பி வருகையில் அந்த மனிதன் அவளைக் கை தட்டிக் கூப்பிட்டான். குமுதத்திற்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. போக லாமா, வேண்டாமா என்று நினைத்துக் கடைசியில் என்னதான் சொல்கிறான், பார்ப்போமே என்று மனத்தைத் திடப் படுத்திக் கொண்டு, அவள் ரூபமாகவே இந்த நெக்லேஸ் விஷயத்தில் வெற்றி பெற எண்ணி அவனிடம் போய், "என்ன?" என்றாள்.

"உன்மேலே அபாண்டமான பழி ஒன்று போட்டிருக்கிறார்கள், இல்லையா?" என்றான் அவன் எடுத்த எடுப்பிலேயே.

குமுதத்திற்குத் தூக்கிவாரிப் போட் டது. அதற்கு இரு காரணங்களுண்டு. ஒன்று, தன் விஷயத்தை இவன் எப்படித்



சித்திரக்காரரின் மகன் :—என்ன அப்பா ! நீ எழுதியிருக்கிறது பூனைதானே ?

சித்திரக்காரர் :—ஆமாம் !

சித்திரக்காரரின் மகன் ;—அதற்கு வால் இல்லையே ?

சித்திரக்காரர் :— அவசரப் படாதே ! அதன் வால் வர்ணக் கிண்ணத்தில் இருக்கிறது !

தெரிந்து கொண்டான் என்பது. மற்றொன்று அவன் குரலை ஏற்கெனவே எங்கேயோ கேட்டது போலிருந்தது.

"ஆமாம் ; உங்களுக்கு எப்படித் தெரிந்தது ?" என்றான்.

"அந்த விசாரணை எல்லாம் அப்புறம் இருக்கட்டும். வைர நெக்லேஸுக்கு என்ன சொல்வதாக உத்தேசித்திருக்கிறாய் ?" என்றான்.

"ஒன்றும் தெரியவில்லை. பைத்தியம் பிடித்துவிடும் நிலையில் இருக்கிறேன். நீங்கள்தான் ஏதாவது யோசனை சொல்ல வேண்டும்" என்றாள் அவள்.

"நீ திருடவில்லை என்பது உண்மை தானே ?"

"சத்தியமாகச் சொல்கிறேன். அந்த நெக்லேஸ் கறுப்பா, சிவப்பா என்பது கூட எனக்குத் தெரியாது !"

"சரி, உங்கள் வீட்டில் வேலை செய்கிறானே, அவன் திருடியிருக்க முடியுமா?"

நீதிபதியின் குறுக்கு விசாரணை போல் இருந்த கேள்விகளுக்கு அவளும் 'டக், டக்' கென்று பதில் சொல்லி வந்தாள்.

"வீணாக ஒருவர்மீது அபாண்டமாகப் பழி சொல்ல விரும்பவில்லை. அவன் திருடுவானா, இல்லையா என்பது எனக்குத் தெரியாது. நான் இங்கே வேலைக்கு வந்து ஓரிரு மாதங்கள்தானாகியுள்ளன. ஆகவே, பழி என்மீது போடப்பட்டிருக்கிறது. அவனோ பத்து வருஷங்களாக வேலை செய்து வந்திருக்கிறானாம்......"

"சரி ; அவன்தான் இந்த நெக்லேஸைத் திருடியிருக்கிறான். அவன் குடிசைக்கருகில் உள்ள தோட்டத்தில் பீர்க்கங் கொடி படர்ந்துள்ள இடத்தில், மேற்குப் பக்கத்து மூலையில் தோண்டிப் பார்க்கச் சொல் ; கிடைக்கும். பிறகு......"

"ஐயையோ ! உண்மையாகவா ? அப்புறம் பொய்யாக இருந்து விட்டால், அவன்மீது வீண் பழி சுமத்தியதற்காக மேலும் என்னைத் துன்புறுத்துவார்களே !"

"நீ பயப்படாதே ! நான் ஆதார பூர்வமாகச் சொல்கிறேன். வேண்டுமானால் நானே வந்து சொல்கிறேன். அப்படி நீங்கள் தேடி அது கிடைத்து விட்டால், நாளைய தினம் இதே இடத்தில் இதே நேரத்திற்கு வா ! இன்னொரு துப்பையும் துலக்குகிறேன் !" என்று கூறிப் போய் விட்டான் அந்த மனிதன்.

குமுதத்திற்கு ஒன்றுமே புரியவில்லை. தான் கண்டது கனவா, நனவா என்று தெரியவில்லை. தன்னுடைய நலனில் இவ்வளவு அக்கறை கொண்ட மனிதர் யாராக இருக்க முடியும் என்று ஆராய்ந்து பார்த்தாள் நெடுநேரம். ஒன்றும் தோன்றவில்லை. கடைசியில் தனக்குத் தெரிந்தவராகத்தான் இருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தாள். தான் அங்கேயே நீண்ட நேரம் இருந்து விட்டதை உணர்ந்து, வேகமாக வீடு நோக்கிப் போனாள்.

★

பொழுது விடிந்தது. வீட்டுக் காரியங்களை எல்லாம் முடித்துவிட்டுக் குமுதம் சிறிதுநேரம் ஓய்வெடுத்துக் கொண்டாள். வீட்டிலுள்ளவர்கள் தங்கள் காலைக் கடன்களை முடித்துக் கொண்ட பிறகு, எசமானியம்மாள் குமுதத்தை நோக்கி, "என்னடி, என்ன சொல்லப் போகிறாய் ?" என்றாள்.

குமுதம், "ஐயோ ! எத்தனை தரம் சொல்லிவிட்டேன், நான் எடுக்கவில்லை என்று ! நேற்று நான் ஒரு ஜோஸ்யனைக் கேட்டதில் அவன்......இந்த வீட்டில்......வேலை செய்பவன்......திருடியிருப்பதாகவும்......அவன் வீட்டுப் புழக்கடையில் உள்ள பீர்க்கங் கொடிக்குப் பக்கத்தில்......தோண்டினால்......கிடைக்கு மென்றும் சொன்னான்" என்றாள்.

அதற்குள் வீட்டு எசமானி, "அடி பாவி ! நீ திருடியது மல்லாமல் பத்து வருஷமா சந்தேகத்திற்கு இடம் தராத வகையில் வேலை செய்து வருபவன் மீதா பழி போடுகிறாய் ? ஊம். போலீஸில் எழுதி வைத்தால்தான் நீ வழிக்கு வருவாய் !" என்று கர்ஜித்தாள். வீட்டு எசமானர் குறுக்கிட்டு, "எதற்கும் போய்ச் சோதனை செய்துதான் பார்ப்போமே ! ஒரு சமயம் அவனே திருடியிருக்கலாம். அதனால்தான் இரண்டு நாள் ஆசாம்

என்று வேலைக்கு வரவில்லை போலிருக்கிறது!'' என்றார்.

பிறகு வீட்டு எசமானர், ஒரு போலீஸ்காரனையும், குமுதத்தையும் அழைத்துக்கொண்டு, வேலைக்காரியின் வீட்டிற்குப் போனார். கதவைப் 'பட், பட்'டென்று தட்டியதும், அவள் நடுங்கிக் கொண்டே திறந்தாள். போலீஸ்காரனையும், எசமானையும் கண்டதும் அவள் முகம் பேய் அறைந்தது போல மாறியது.

போலீஸ்காரன், ''வைர நெக்லேஸ் இந்தக் குடிசையில் இருப்பதாகத் தகவல் கிடைத்திருக்கிறது. எங்கே இருக்கிறது, உண்மையைச் சொல்லிவிடு! இல்லாவிட்டால் ஜெயிலுக்குப் போகவேண்டி வரும்!'' என்றான்.

''ஐயோ! உண்மையைச் சொல்லிவிடறேனுங்க! நீங்கதான் காப்பாத்தணும். என் புருஷனுடைய துர்ப்போதனையால் திருடிவேன். நான் 'மாட்டேன்'னு சொன்னதுக்கு எனக்கு உதை விழுந்தது இருக்கே, அதை இப்போ நெனச்சாக்கூடப் பயமாயிருக்குங்க. கொண்டாந்தாத்தான் வீட்டுக்குள்ளே சேப்பேன் அப்படின்னுங்க. நான் வேறே வழியில்லாமே எசமானத் துரோகம் செஞ்சேனுங்க. உங்க காலில் விழறேன், மன்னிச்சுடணும்......'' என்று விம்மி விம்மி எசமானரின் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள்.

"சரி, சரி, எழுந்திரு! உன்னாலே அநியாயமா இந்த அம்மா ஜெயிலுக்குப் போக நேர்ந்திருக்குமே! அந்தமட்டும் தப்பித்துக் கொண்டார்கள்!'' என்றார் வீட்டு எசமானர்.

உடனே எல்லாரும் தோட்டத்திற்குச் சென்று தோண்டச் சொன்னார்கள். அங்கே குமுதம் சொன்ன அதே இடத்தில் ஒரு பெட்டியில் வைர நெக்லேஸ் இருந்தது. அதை எடுத்துக் கொண்டு எல்லோரும் கிளம்பினார்கள்.

நெக்லேஸ் கிடைத்த சந்தோஷத்தில் தன்னை அங்கே வரச் சொன்னதைக் கூட மறந்து விட்டாள் குமுதம். உடனே வெகு வேகமாகப் புறப்பட்டுப் போனாள். அங்கே அந்த மனிதன் நின்றுகொண்டிருந்தான்.

''காரியம் ஆகிறவரை காலைப் பிடிக்கிறது. காரியம் ஆனபிறகு கழுத்தைப் பிடிக்கிறது. இல்லையா? நெக்லேஸ் கிடைத்த சந்தோஷத்தில் என்னை மறந்து விட்டாயா? இன்னும் கொஞ்ச நேரம் கழித்து வந்திருந்தாயானால் நான் இந்த இடத்தை விட்டுப் போயிருப்பேன்'' என்று கோபத்துடன் கூறினான் அந்த மனிதன்.

''இல்லை, மறந்து விட்டது உண்மை தான். ஞாபகம் வந்ததும் 'குடு, குடு'வென்று ஓடிவந்தேன். மன்னிக்க வேண்டும்......தாங்கள் செய்த உதவிக்கு என்ன கைம்மாறு செய்யப்போகிறேனோ?'' என்றாள் குமுதம். பிறகு, அவள் ''நீங்க யார் என்று சொல்லிவிட்டால் அதற்கு ஏற்றபடி உபசாரம் செய்வேன்'' என்றாள்.

''ஓகோ! ஆளுக்கேற்றபடி உபசாரம் செய்வாயா? பேஷ்! சரி; நான் யாருன்னு இன்னமும் தெரியலையா?'' என்று கூறிக்கொண்டே தன் மீசையையும், தாடியையும் பிடுங்கி எறிந்தான். ''ஆ! நீங்களா!'' என்று கூறி மூர்ச்சித்துக் கீழே விழ இருந்த குமுதத்தை அந்தமனிதன் கெட்டியாகப் பிடித்துக்கொண்டான். வெகு நேரம் வரை அவளுக்கு மூர்ச்சை தெளியவில்லை. ஆகவே ஒரு வண்டியை அமர்த்திக் கொண்டு, அவளைத் தான் இருந்து வந்த வீட்டுக்கு அழைத்துச் சென்றான். அங்கே சிகிச்சை செய்ததும், அவள் மூர்ச்சை தெளிந்து கண் விழித்தாள்.

★

ஒரு நாள் மாலை, இளம் தென்றல் காற்று வெகு ரம்யமாக வீசிக்கொண்டிருந்தது. குமுதமும், அந்த மனிதனும் அவர்கள் வீட்டு மாடியில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தனர்.

''ஆமாம், நீங்கள் எப்படி இங்கே வந்தீர்கள்? எப்படி இந்த நெக்லேஸ் விஷயத்தைத் தெரிந்து கொண்டீர்கள்?'' என்



சர்க்கஸ் மானேஜர் (தச்சனைப் பார்த்து):—நீர் செய்து கொடுத்த நாற்காலிகளின் கால்கள் ஒன்றுவது சரியாகவே இல்லை. அதன் மேல் உட்கார்ந்து ஆட்டம் பார்ப்பவர்கள் என்ன சொல்லுவார்கள்?

தச்சன்:—ஆட்டம் நல்ல ஆட்டமாக இருக்கிறது என்பார்கள்!



புரொபஸர் (ஞாபக மறதி உள்ளவர்):—போன வருஷம் இந்த வகுப்பில் உன் சகோதரன் யாராவது படித்தார்களா?

மாணவன்:—இல்லை, ஸார்! நானேதான் படித்தேன்.

புரொபஸர்:—ஆகா! என்ன ஒற்றுமை! என்ன ஒற்றுமை! பார்ப்பதற்கு அந்தப் பையன் மாதிரியே இருக்கிறாயே!

றாள் குமுதம் வெகு ஆவலாக. அந்த மனிதன் பின்வருமாறு கூறினான்:

"நாமெல்லோரும் குடும்பமாகப் புறப்பட்டோமா? பிறகு வழியில் ஒரு கூட்டத்தினரிடையே நான் அகப்பட்டுக் கொண்டேன். எப்படியோ தப்பித்துக் கொண்டு வந்து பார்த்தேன். நமது குடும்பத்தினரில் ஒருவரைக் கூடக் காணவில்லை. சரி, நீங்கள் எல்லோரும் என்னை விட்டுவிட்டுப் போய் விட்டீர்கள் என்ற முடிவுக்கு வந்து, பல கஷ்டங்களை அனுபவித்து விட்டு, எப்படியோ இங்கே வந்து சேர்ந்தேன். வழியில் நம்மவர்களைக் காணும்போதெல்லாம் உன்னைப் பற்றியே விசாரித்து வந்தேன். ஒருவராவது உன்னைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லை. சரி, நாம் கொடுத்து வைத்தது அவ்வளவுதான் என்று தேற்றிக் கொண்டு, இங்கே என் நண்பனின் வீட்டில் வசித்து வந்தேன். அவனே எனக்கு ஒரு வேலையும் வாங்கிக் கொடுத்தான்......

"இப்படி இருக்கையில் ஒருநாள் கோவிலில் உன்னைப் போன்ற உருவத்தைப் பார்த்தேன். ஒரு சமயம் நீதானோ என்று சந்தேகம் வந்தது. தினமும், மாலைவேளையில் உன்னைப் பின்பற்றி வர ஆரம்பித்தேன். கடைசியில் நீ 'குமுதம்'தான் என்ற முடிவுக்கு வந்தேன். சில சமயங்களில் உனக்குத் தெரியாமல் நீ உன் வீட்டுக்குப் போகும் வரையிலும் வந்திருக்கிறேன். அப்படி ஒரு நாள் உன்னை உன் வீடு வரை தொடர்ந்து, பிறகு வெளியே வருகையில், ஒரு பெண் எதையோ புடவைத் தலைப்பால் மூடிக் கொண்டு வந்ததை உற்றுக் கவனித்தேன். அவளையே தொடர்ந்து, அவள் எங்கே போகிறாள் என்பதைப் பார்த்தேன். தன் குடிசைக்குப் போய் ஓர் ஆணிடம் அதைக் கொடுத்தாள். அது ஒரு பெட்டிமாதிரி இருந்தது. அவன் அதைத் தன் குடிசையில் இருந்த தோட்டத்தில் புதைத்து வைத்ததையும் கவனித்தேன். அந்த வீட்டில் திருடு போனதிலிருந்து உன் முகம் வாட்டமுற்றிருப்பதையும், நீ இளைத்து வருவதையும் கவனித்தேன். சரி, அந்தப் பெண் திருடியதுமல்லாமல் உன்மீது பழி போட்டிருக்கிறாள் என்பதை உணர்ந்து கொண்டேன்.

"ஒருநாள் உன்னைக் கோவிலில் சந்தித்து, யூகமாக ஒரு கேள்வியைக் கேட்டேன். நீ பிரமித்துப் போய்விட்டாய். சரி, யூகித்தது சரிதான் என்ற முடிவுக்கு வந்து, நான் கண்டவைகளை அப்படியே சொன்னேன். நீயும் எப்படியோ இந்தக் குற்றச்சாட்டிலிருந்து விடுபட்டதுமல்லாமல், என்னையும், உன்னையும் சேர்த்துவைக்க ஒரு சந்தர்ப்பம் ஏற்பட்டு விட்டது!" என்று கூறி முடித்தான்.

"துப்பறியும் இலாகாவை விட வெகு ஜோராகத் துப்பு கண்டு பிடிச்சிருக்கீங்களே!" என்றாள் குமுதம்.

"எப்படியோ, நீயும் நானும் ஒன்று சேர வைத்த இந்த வைர நெக்லெஸ் வாழ்க!" என்றான் குமுதத்தின் கணவன்.

*

வீட்டு எசமானர், வீட்டு எசமானியம்மாளிடம் அதே நேரத்தில் பின் வருமாறு பேசிக் கொண்டிருந்தார்:

"பார்த்தாயா, வேலைக்காரியின் யோக்கியதையை! அநியாயமாக ஒரு பெண்மீது பழி சுமத்தினாளே!......அது சரி, இனிமேல் நம்ம வீட்டுக்கு வேறே சமையற்காரியைப் பார்க்க வேண்டியதுதான்!" என்றார்.

"ஏன்?" என்றாள் அவள் வெகு ஆவலாக.

"குமுதத்தின் கணவன்தான் இந்தப் பழியிலிருந்து அவளைத் தப்ப வைத்திருக்கிறான். வேலைக்காரி திருடிய சமயத்தில் இருந்து, அவளைத் தொடர்ந்து, எல்லாவற்றையும் கவனித்திருக்கிறான். பையன் பலே குடிகை! எப்படியோ இரண்டு பேரும் ஒன்று சேர நேர்ந்ததே, அதுவே போதும்!" என்றார்.

"ஆமாம்! போகட்டும், பாவம்! அகதியாக இருந்து கஷ்டப்பட்ட அவள் தன் கணவனிடம் இருந்து நல்லபடியே வாழட்டும்!" என்றாள் எசமானியம்மாள்.

# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.

## 310. வருகிறாள் தானமாலை

அதிகாயன் முதலிய வீர மக்கள் இறந்தது காரணமாகத் துயர வெறி ஒன்று உண்டாகி ராவணனைப் படாத பாடு படுத்தி விட்டது. பூமியை உடைத்து விடுவோமா, வானத்தை இடித்து விடுவோமா என்றெல்லாம் புலம்புகிறான். துயரத்தோடு ஆங்காரம் வேறு கலந்து கொள்ளுகிறது. இந்த நிலையில் பக்கத்தில் நின்றவர்களுக்கு வாய் திறந்து ஒரு வார்த்தை பேச முடியவில்லை. ஸ்வாசிப்பதுகூடச் சிறிது நேரம் நின்றுவிட்டது. மனசோ தொழில் செய்யவில்லை. ஸ்தம்பித்து விட்டது.

ஒருவரும் உரையார்வா யின்,
  உயிர்த்திலர், உள்ளம்ஓய் வார்,
வெருவரும் தகையரா கி
  விம்மினர் இருந்தவே லை,
தருஅமைந் தனையதோ ளான்
  தன்எதிர்,— தானமா லை
இரியல்உற்(று) அலறிஓ யாப்
  பூசல்இட்(டு) ஏங்கிவந் தாள்.

[வெருவருந் தகையராகி: ஒரே பயத்தில் நின்றவர்களாய்; விம்மினர் இருந்த வேலை: விம்மி விம்மி நின்றாரே ஒழிய ஒரு வார்த்தையும் பேசவில்லை. இந்த நிலையில்; தரு அமைந்து அனைய தோளான் தன் எதிர்: மரமும் இணையும் இருப்பது போலப் பல தோள்கள் கொண்ட கவசத் தோற்றத்துடனே ராவணன் எதிரே; தானமாலை: அவனுடைய மனைவி தானமாலை. (அதிகாயனது தாய்); இரியல் உற்று: உடல் நடுங்கியவளாய்; அலறி ஓயாப் பூசலிட்டு: அலறிக் கொண்டும் ஒரேபடியாய் எல்லாரையும் திட்டிக் கொண்டும்; ஏங்கி வந்தாள்: ஏங்கி ஏங்கி அழுது கொண்டு வந்தாள்—ராவணன் எதிரே.]

* * *

ராவணனது பல மனைவிகளுள் தானமாலை ஒருத்தி. அரக்க குலத்து உயர்ந்த குடும்பத்தைச் சேர்ந்தவள். வீரம், அதிகாரம் முதலிய தோரணைகளிடையே வளர்ந்தவள். ராவணனே அவளை மதித்து நடக்க வேண்டியவன்தான்.

அவள் தன் மார்பில் கையால் 'படீர் படீர்' என்று அடித்துக் கொண்டு வருகிறாள்.

மலைக்குவட்(டு) இடிவிழ்ந்தென் ன,
  (வளைகளோ(டு) ஆரம்ஏங் க)
முலைக்குவட் டெற்றும்கை யாள்
  முறைதிறந் தன்னவா யாள்,
தலைக்குவட் டணைந்தசெக் கர்
  சரிந்தெனக் குழல்கள்தாழ்ந் தி
உலைக்குவட் டுருகுசெம்போத்(து)
  உதிரநீர் வழங்குகண் ணாள்.

[மலைக் குவட்டு இடி விழ்ந்தென்ன: மலைச் சிகரத்தில் இடி விழுந்தது போல; (வளைகளோடு ஆரம் ஏங்க: கையிலுள்ள வளையல்களுடன் மார்பில் அணிந்த மணி ஆரங்கள் தாங்கச் சக்தியில்லையே யென்று சொல்லுவது போலச் சப்திக்க); முலைக் குவட்டு எற்றும் கையாள்: பெருத்த ஸ்தனங்கள் மேல் கையால் அடித்துக்கொண்டு; முறை திறந்தன்ன வாயாள்: மலைக் குகை போன்ற வாயைத் திறந்து அலறியவளாய்; தலைக்குவட்டு அணைந்த செக்கர் சரிந்தெனக் குழல்கள் தாழ்த்தி: தலையாகிய சிகரத்திலிருந்து சரிந்த செம் மேகம் போன்ற செம்பட்டை ரோமக் கற்றைகளை அப்படி அப்படியே தொங்க விட்டுக்கொண்டு; உலைக்கு வட்டு உருகு செம்பு ஒத்து: கொல் உலைக் குகையில் காய்ச்சிய செம்பின் குழம்பு போல; உதிர நீர் வழங்கும் கண்ணாள்: இரத்தக் கண்ணீரை வடித்துக்கொண்டு வந்தாள்.]

இப்படி ஒரு அபூர்வமான பாத்திரத்தை உண்டாக்கி, அதன் மூலமாகச் சோகத்தின் அதி வேகத்தைக் காட்ட வருகிறார் கவிஞர்.

இன்னும் என்ன செய்கிறாள் தானமாலை, என்பதை அடுத்தாற்போல் பார்க்கலாம்.

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 12. தனுராசனம்

இந்தக் காலத்தில் கோவிலுக்குப் போகிறவர்கள் அதிகமாய் இருப்பார்களா, ஆஸ்பத்திரிக்கு வைத்தியர்களை நாடிப் போகிறவர்கள் அதிகம் இருப்பார்களா என்று கணக்குப் பார்த்தால், அநேகமாய் ஆஸ்பத்திரிக்கு வைத்தியர்களை நாடிப் போகிறவர்கள்தான் அதிகம் இருப்பார்கள்.

நம்முடைய பெரியோர்கள் தெய்வ வழிபாட்டிலும் தேகப் பயிற்சியைப் புகுத்தியிருக்கிறார்கள். கணபதியைப் பார்க்கும்போதே சிலர் அவர்களை அறியாமல் தலையில் குட்டிக்கொண்டு, இரண்டு காதுகளையும் பிடித்துத் தோப்புக் கரணம் போடுவதைப்போல் செய்வார்கள். சந்நிதியில் நின்றுகொண்டு நன்றாகத் தோப்புக்கரணம் போடுகிறவர்களும் உண்டு. நவக்கிரகங்களை நூற்றெட்டு தடவை சுற்றுவார்கள். நமது தென்னாட்டில் பல கோவில்களை, விஸ்தாரமான பிரகாரங்களாக அமைத்துக் கட்டியிருக்கிறார்கள். ஒவ்வொரு பிரகாரமாகச் சுற்றிக்கொண்டு பிறகு சந்நிதிக்குப் போவார்கள். இவைகளெல்லாம் தேகப்பயிற்சி யல்லாமல் வேறு என்ன? பெருமாள் சந்நிதியில் சாஷ்டாங்கமாய் விழுந்து, விழுந்து நமஸ்கரிப்பது பஸ்கியல்லவா? வயிற்று வலி வந்தவர்கள், திருப்பதி வேங்கடேசப் பெருமாளை வேண்டிக்கொண்டு, "கோவிந்தா! கோவிந்தா!!" என்று உருளுவார்கள். திருப்பதி மலைக்குப் போவதற்குள் வயிற்று வலி போய்விடும். அது தனுராசனம் அல்லாமல் வேறு என்ன? சிலர் அம்மன் சந்நிதியில் ஒரு எலுமிச்சம் பழத்தை உருட்டி விட்டு, அதை எடுக்கும்போது சாஷ்டாங்கமாய் விழுந்து நமஸ்கரித்து எடுப்பார்கள். மறுபடியும் இருந்த இடத்திலிருந்து உருட்டி விட்டு, மீண்டும் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து எடுப்பார்கள். இப்படிச் செய்பவர்கள் வயிற்றுவலி உள்ளவர்கள். பெண்களும் இவைகளைச் செய்வார்கள். இப்படிச் செய்துகொண்டே பிரகாரத்தை இருபத்தோரு தடவையிலிருந்து நூற்றெட்டு தடவை வரையில் சுற்றி வருவார்கள். அம்மன் மனமிரங்கி நோயை அகற்றமாட்டாளா என்ற நம்பிக்கை. இதில் தனுராசனப் பயிற்சி இருக்கிறதென்று கனவிலும் அவர்களுக்குத் தெரியாது. தெரிந்தால் அசட்டை செய்வார்கள் என்றுதான் பெரியோர்கள் இம்மாதிரிப் பல பயிற்சிகளைக் கடவுள் பக்தியில் இணைத்து விட்டார்கள் போலும்!

இதில் இரண்டுவித லாபம் இருக்கிறது. பக்தியால் ஆத்மா சுத்த மடைகிறது. பயிற்சியால் உடல் சுத்த மடைகிறது. பிறகு பக்தனுக்குக் கடவுள் அருள் கிடைக்கக் கேட்க வேண்டுமா?

இளம் தொந்தி, பெரும் தொப்பை முதலியன கரையத் தனுராசனம்போல வேறு ஒரு சாதனை கிடையாது. ரத்தப்போஷணை அற்ற சதைகள், கொழுப்புகள் மூட்டையாகச் சேர்ந்திருப்பதே தொப்பை. இங்கு சரியான ரத்தப் போஷணை இல்லாமல் மந்தப்பட்டிருக்கும். நாடி நரம்புகள் அடைபட்டிருக்கும். சில இடங்களில் ரத்தம் தேங்கியும் இருக்கும். இந்தக் குறைகளை எல்லாம் தனுராசனம் ஒன்றினால் தான் போக்க முடியும்.



தனுராசனத்தைப் பயிற்சி செய்யும் முறை: மிருதுவான விரிப்பில் குப்புறப் படுத்துக் கொண்டும் கைகளைப் பக்கத்தில் ஒட்டியவாறு நீட்டியும் வைத்துக்கொள்ள வேண்டும். முகத்தை விரிப்போடு சேர்த்து ஒட்டிவைத்துக் கொண்டு உடலைத் தளர்த்தவேண்டும். பிறகு, கால்களையும் அகற்றி முழங்காலைப் பின்னுக்கு மடித்து, இரண்டு கைகளால், கால்களின் மணிக்கட்டுகளைப் படத்திலுள்ளபடி பிடித்துக் கொள்ளவும். உடனே கால்களை உதைத்து மேல் எழும்பக்

கைகளை விடாமல் கால் போலப் பிடித்து இழுத்துக்கொண்டு, முதுகைப் பின் பக்கம் கூடுமானவரை வளைக்கவும். வில்லின் வடிவத்தை மனதில் வைத்துக் கொண்டு செய்ய வேண்டும். சரியானபடி வந்து விட்டதற்கு அடையாளம், வயிறு மட்டும் தரையில் ஒட்டியிருக்கும், மற்ற பாகங்கள் வளைந்துத் தூக்கப்பட்டிருக்கும். மூச்சு சௌகரியம் போல் இழுக்கவும் விடவும் செய்யலாம். மூச்சைப் பிடித்துச் செய்ய வேண்டுமென்பதில்லை. அவ்வாறு இரண்டு, மூன்று விநாடிகள் இருந்து பழைய நிலைக்கு வந்து இளைபாறிக் கொள்ளவும், இதை மூன்றிலிருந்து ஆறு தடவை வரைச் செய்யலாம். இது முதல் படி.

இரண்டாவது படி: தனுராசனத்தில் இருந்தவாறே, முன்னும் பின்னுமாக சரீரத்தை, குழந்தைகளின் ஆட்டும் குதிரைப் போல் ஆட்டவேண்டும். இதையும் மூன்றிலிருந்து ஆறு தடவை செய்யலாம்.

மூன்றாவது படி: மேற் சொன்னபடி முன்னுக்கும், பின்னுக்குமாக ஆட்டிய பிறகு ஆசனத்தைக் கலைத்து விடாமல், இடது கைப் பக்கமாகவும், வலது கைப் பக்கமாகவும் சரீரத்தைத் திருப்பவேண்டும். இம்மாதிரியும் மூன்றிலிருந்து ஆறு தடவை செய்யலாம்.

முதலில் தனுராசனத்தில் நின்று, பிறகு முன்னுக்கும் பின்னுக்குமாக மூன்று தடவைகளோ அல்லது ஆறு தடவைகளோ செய்து பக்கவாட்டிலும், மூன்று தடவைகளோ அல்லது ஆறு தடவைகளோ செய்தால் ஒரு தடவை தனுராசனம் செய்த மாதிரி. இப்படி அவரவர்கள் சௌகரியம் போல் மூன்று முதல் ஆறு தடவை வரை தனுராசனம் செய்யலாம்.

அதிக கனமுடையவர்களுக்கும், பெருந்தொந்தி உடையவர்களுக்கும் இது செய்யக் கஷ்டமாய் இருக்கும். ஆனால் அவர்கள் தான் இதைக் கட்டாயமாகச் செய்யவேண்டும். கனமானவர்களுக்கு மாத்திரமல்ல ஒல்லியாய் இருப்பவர்களுக்குக்கூடச் சிலருக்கு முதுகெலும்பு வளையாததால் சரியாய் வராது. சிலருக்குக் கால்களை மடித்துக் கைகளால் பிடிக்க எட்டாது. சிலருக்கு ஒரு காலை மட்டும் பிடிக்கவரும். இரண்டாவது காலைப் பிடிக்க முடியாது. தாரமாய் விற்கும் சதைகள் கனத்து மடிக்க முடியாததே இதற்குக் காரணம். இவர்களெல்லாம் மற்றொருவரின் உதவியால் தான் செய்ய முடியும். எட்டாத காலைப் பிடித்துக்கொடுக்கச் சொல்லி சில நாட்கள் வரை பிடித்துப் பழகலாம். அப்படிப்

தான் வலிக்கும். நான்கு ஐந்து நாட்களில் வலிகள் மறைந்து சுகமுண்டாகும். சிலருக்கு வயிற்றைக்கூட வலிக்கச் செய்யும். முக்கியமாய்ப் பெண்களுக்கு, கர்ப்பப் பை பலவீனமாய் இருந்தால் முதலில் சற்று வலிக்கும். வலித்தால் செய்யக் கூடாது. வலி நின்ற பின் தொடர்ந்து செய்யலாம்.

தனுராசனத்தினால் ஏற்படும் பலன் :— வயிற்றில் உள்ள உறுப்புகள் மிக நன்றாய் நசுக்கப்படுவதால், எல்லாமே புத்துயிர் பெறுகிறது. அடைந்து கிடக்கும் நரம்புகளில், புது ரத்தம் பாய்ந்து வேகமாகத் தள்ள, வயிற்றுக் கொழுப்புகள், ஊளைச் சதைகள் கரைகின்றன. ஆகாரப்பை பலம் பெறுகிறது. சிறு குடல், பெருங்குடல், ஸ்ப்லீன், பான்கிரியாஸ், சிறு நீர்க்கருவி, சிறு நீர்ப்பை, மலக்குழாய், சுக்கிலப்பை, பெண்களுக்குக் கர்ப்பப்பை ஆகிய எல்லாவற்றிற்கும் புது ரத்தம் பாய்ந்து ஆரோக்கிய வீர்யம் அடைகிறது.

இதில் தொந்தி கரையும் என்று சொல்லவே வேண்டாம். ஆகாரப் பை நசுக்கப்படுவதால் நல்ல சக்தி அடைந்து, அஜீரணம் உண்டாகாது. வயிற்று வலி போகும். ஆகாரப் பை சுறு சுறுப்புடன் வேலை செய்வதால் அங்கு ஆகாரங்கள் தங்கி அழுகாது. வாய் துர்நாற்றம் போகும். மூலம், பௌத்திரம் முதலிய வியாதிகள் போகும். நீர் ரோகம் பூரணமாய்ப் போய்விடும். முதுகெலும்பின் நடுப்பாகம் வளையும் தன்மை அடைவதால் இளமை ஓங்கும்.

அடிப்படியால் வேலை செய்து முதுகு. இடுப்பு வலியால் கஷ்டப்படும் சகோதரிகளுக்கு இது ஒரு சிரம பரிகாரம். பல பிரசவங்களால் வயிறு பெருத்த சகோதரிகளுக்கும் இதுதான் சமய சஞ்சீவி. இதை விட்டு வேறு மார்க்கத்துக்குப் போகிறவர்கள், ஒரு வஸ்துவைப் போட்ட இடத்தில் தேடாமல், வேறு இடத்தில் தேடினவர்களைப் போல் ஆவார்கள்.

கர்ப்பிணிகள் புதிதாய் ஆரம்பித்துச் செய்யலாகாது. வழக்கமாய்ச் செய்யும் சகோதரிகள் கருத் தரித்த இரண்டு மாதங்கள் வரைதான் செய்யலாம். பிரசவித்த பிறகு மற்ற ஆசனங்கள் செய்து, கருப்பப் பை உறுதியான பின்தான் தனுராசனம் பழகலாம். அதாவது நான்கு ஐந்து மாதங்கள் கழித்த பிறகுதான் செய்யலாம். கருப்பப் பை உறுதியாகும்; கருச் சிதைவு உண்டாகாது. குறைப் பிரசவம் உண்டாகாது. வீட்டு விலக்கு சீர்படும். ஆனால் ஆபரேஷன் ஏதாவது நடந்திருந்தால், ஆசன நிபுணர்களின் ஆலோசனையின் பேரிலேயே ஆசனங்களைச் செய்யத் துவங்க வேண்டும். (தொடரும்)

# பிஜித் தீவிலே

சுவாமி ருத்ரானந்தர்

ஆதி காலத்தில் கைவித்தியர் கூட்டங் கூட்டமாக வசித்து வந்தனர். ஒவ்வொரு கூட்டத்துக்கும் பொதுவான பாகங்களாக நிலங்களை வகுத்துக் கொண்டிருந்தனர். நிலம் இவர்களிடமிருந்துதான் குத்தகைக்கு வாங்க வேண்டும். கைவித்தி ஒருவன் தனக்கு இவ்வளவு பணம் கொடுத்தால் ஒரு ஆண்டு நிலம் 20 அல்லது 30 ஏக்கர் சில வருஷங்களுக்குக் குத்தகைக்குக் கொடுப்பதாகச் சொல்வான். வருஷாந்திரக் குத்தகைப் பணம் சர்க்காரால் வசூலிக்கப்படும். இந்த இனாம் அவன் முன்னதாக நேரில் வாங்கிக் கொண்டு விடுவான். இது போலப் பல கைவித்தியர்கள் தங்கள் இனத்தாரில் பிறருக்குத் தெரியாமல் பல இந்தியர்களிடமிருந்து இனாம் பணம் பெற்று விடுவார்கள். இந்தியரும் தம்முள் போட்டியிட்டுக் கொண்டும், தமக்கு எப்படியாவது நிலம் கிடைக்க வேண்டுமே என்ற ஆசை மேலிட்டும், அறிந்தும் அறியாமலும் பணம் கொடுத்து ஏமாறுவார்கள். முடிவாக யாரோ ஒரு அதிர்ஷ்டமுள்ள இந்தியனுக்குத்தான் அந்த நிலம் கிடைக்கும். அந்தத் தலைக் கட்டைச் சேர்ந்த கைவித்தியர் ஒரு காலைக்குத் தங்கள் தலைவன் முன்னிலையில் 'கூட்டம்' நடத்தி யாராவது ஒருவனுக்கு நிலம் குத்தகைக்குக் கொடுப்பார்கள். மற்ற எல்லாருடைய பணமும் நஷ்டமாய்ப் போனது போனதே.

சமீபத்தில் இதற்கென ஒரு சட்டம் செய்து நிலம் குத்தகைக்கு விடுவதற்கென ஒரு 'டிரஸ்ட் போர்டு' நியமிக்கப்பட்டிருக்கிறது. இப்போது, குத்தகை சுமார் முப்பது வருஷங்கள் வரைக்கும் கொடுக்கப்பட வேண்டுமென்றும், நல்ல விவசாயி என்றால் அக் குத்தகையின் கால அளவை அதிக காலைக்கு நீடிக்கச் செய்வதற்கும் அநுகூலமான சட்டங்களும் செய்யப் பட்டிருக்கின்றன. இந்தச் சட்டங்கள் ஐரோப்பியர் கைக்குள் போகாமல் எஞ்சி நிற்கும் நிலத்தையே பொறுத்ததையாகும். மேற் சொன்ன ஸி எஸ். ஆர். கம்பெனிக்குச் சொந்தமான 'பிரீ ஹோல்ட்' நிலம் ஏராளமாய் உண்டு. அதுவுமின்றி '99 வருஷ லீஸ்' போன்ற நீண்ட லீஸ் ஹோல்ட் நிலமும் பல்லாயிரக் கணக்கான ஏக்கர்கள் கம்பெனி வசமிருக்கின்றன. இந்த லீஸ் ஹோல்ட் நிலத்துக்குக் கம்பெனி ஒரு ஷில்லிங் வாடகை கைவித்தியருக்குக் கொடுத்தால் அதே நிலத்துக்கு இந்தியரிடம் குத்தகைக்கு விட்டு 1 பவுனுக்கு மேல் வசூலித்து லாபம் சம்பாதிக்கின்றது. இவ்வாறு ஐரோப்பியரிடமிருக்கும் நிலங்களுக்கும், கைவித்தியரிடமிருக்கும் நிலங்களுக்கும் இந்தியர் வாடகை கொடுத்து நிலம் பிடித்துப் பாடுபடுவோராய் இருந்து வருகின்றனர். தமக்கெனச் சொந்தமான நிலம் இந்தியர்களுக்குக் கிடையாது.

## 5

கைவித்தியருக்குப் பணத்தின் மதிப்புத் தெரியாது. அவர்கள் பணத்தைச் சேர்த்து வைப்பதுமில்லை. கையிலிருக்கும் போது யார் கேட்டாலும் கொடுப்பார்கள். அது போல் யார் கையில் பணம் இருந்தாலும் அது தங்களுக்குக் கிடைக்கட்டும் என்று நினைப்பார்கள். 'கேரே கேரே' செய்து உதவியைப் பெறுவது எப்பொழுதும் அவர்களுடைய வழக்கம். 'கேரே கேரே' செய்வதென்றால் 'எனக்குக் கஷ்டமாயிருக்கிறது. அதற்காக நீங்கள் உதவி செய்ய வேண்டும்' என்று கேட்டுக் கொள்ளுவதாகும். அவர்கள் கையில் எப்பொழுதும் பணம் தங்குவதில்லை யாதலால் கைவித்தியர் ஓயாது 'கேரே கேரே' செய்து கொண்டிருப்பார்கள். கைவித்தியரிடமிருந்து இந்தியருக்கு ஏதேனும் உதவி கிடைக்க வேண்டியிருந்தாலும் இவ்விதம் 'கேரே கேரே' செய்ய வேண்டும். இதற்கான ஒரு சடங்கு உண்டு. கைவித்தியர் அரைத்து நீரில் கரைத்துக் குடிக்கும் மதுபானம் ஒன்று உண்டு. அதற்கு 'கங்கோனு' என்று பெயர். இந்தியரும், ஐரோப்பியரும் மற்ற எல்லா ஜனங்களும் பெரும்பாலும் இந்த கங்கோனு குடிக்கும் பழக்கத்தைக் கைக்கொண்டிருக்கிறார்கள். இந்த 'கங்கோனு'வை ஒருவர் முன்னால் கொண்டு போய் வைத்து அவரைப் புகழ்ந்து பேசிக் 'கேரே கேரே' செய்வார்கள். கோரிக்கை மிகப் பெரியதாக இருந்தால் அதற்குத் தகுந்தபடி இந்தச் சடங்கும் பெரியதாயிருக்கும். திமிங்கலப் பல் ஒன்றைக் கொண்டு வந்து ஒருவர் முன் வைத்துக் 'கேரே கேரே' செய்து விட்டால், கோரிக்கை எதுவாயினும் அதை நிறை



சூவாவிலுள்ள ஆஸ்பத்திரி

வெற்றியே ஆக வேண்டும் என்று ஒரு திட நம்பிக்கை கொண்டிருக்கிறார்கள். கைவித்தியப் நங்கோனா குடிப்பதிலும் ஒரு விசேஷம் உண்டு. அவர்கள் கூட்டமாக உட்கார்ந்து அதனை ஒரு சடங்காகச் செய்து முடிப்பார்கள். இடிப்பவர் ஒருவர், அரைப்பவர் ஒருவர், எடுத்துக் கொடுப்பவர் ஒருவர், வாங்கிக் குடிப்பவர் தலைவர். தலைவர் முதல் வயதில் சிறியவர் வரையில் படிப்படியாய் வரிசைக் கிரமமாய்ப் பெறுவார்கள். அதை எடுக்கும் போதும், கொடுக்கும்போதும் மந்திரம் சொல்லுவது போல் சில வார்த்தைகள் சொல்லுவார்கள். கொடுப்பவர் ஒரு வகையாகக் கை தட்டுவார். குடித்தபின் எல்லோருமாக ஒரு முறை கை தட்டுவார்கள். இது போலக் கைவித்தியரின் பழக்கங்கள் பல வேடிக்கையாக இருக்கும்.

அவர்கள் தங்கள் பெரியோர்களுக்கு முன்னால் அடங்கி ஒடுங்கி வணக்கமாய் நடப்பார்கள். பெரிய மனிதர்களின் அந்தஸ்துக்குத் தக்கபடி மரியாதையும் அதிகமாயிருக்கும். நங்கோனாவைக் கொடுக்கும்போது ஆட்டம் ஆடிப் பாட்டுப் பாடிக் கொடுப்பார்கள். வாய் மூடி அமைதியாயிருப்பார்கள். புறங் காட்டாமல் பின் செல்வார்கள். நாகரிகம் மாறிய இக் காலத்திலும் கூட இப் பழக்கங்களை அவர்கள் விடவில்லை. கைவித்தியரின் ஆட்டம் பார்ப்பதற்கு வெகு அழகாக இருக்கும். பெண்கள் வரிசையாயிருந்து கைகளை அசைத்துப் பாட்டுப் பாடி, ஆட்டம் ஆடும் போது வெகு திறமையாக ஒரே மாதிரி எல்லோரும் செய்வார்கள். அது போலக் கைவித்திய புருஷர்கள் சேர்ந்து ஆட்டம் ஆடும் பொழுது சற்றும் வேறு படாத கால அளவுடன் அவர்கள் கைகால் உடம்பு அசைத்து வீராவேசத்துடன் தழைகள் முதலியன கட்டிக்கொண்டு ஆடுவதைக் கண்டால் அதி ஆச்சரியமாயிருக்கும்.

பொதுவாகக் கைவித்தியரின் வாழ்க்கை பொது உடைமைக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டது. வீடு கட்டினால் எல்லோரும் சேர்ந்து கட்டுவார்கள். தனித் தனி குடியிருந்தாலும் எல்லா வீடும் எல்லோருக்கும் சொந்தம். வேறு வேறு பயிரிட்டாலும் எல்லோரும் பறித்துத் தின்பார்கள். அவர்களுக்குள் எந்த வேலை வந்தாலும் பொதுவாய்ச் சேர்ந்தே செய்வார்கள். அவர்களுடைய நிலத்துக்குக் குத்தகைப் பணம் வருஷத்துக்கு இரு முறை கிடைக்கும். இதை அரசாங்கம் வசூலித்துக் கொடுக்கின்றது. அப்படிக் கொடுக்கும்போது அந்தந்த தலைவர் வாங்கி அவரவர் கூட்டத்தைச் சேர்ந்த எல்லாரையும் ஒன்றாய் வைத்துக் கணக்காய்ப் பிரித்துக் கொடுப்பார். கைவித்தியரின் வாழ்க்கையில் ஆண்பிள்ளைகளுக்கும் பெண் பிள்ளைகளுக்கும் வயதுக்குத் தகுந்தபடி சில சடங்குகள் செய்கிறார்கள். விவாகச் சடங்கும் உண்டு. இது போன்ற எல்லாக் காலங்களிலும் பார்க்க வருபவர் எல்லோரும் அவரவர் வீட்டிலிருந்து உணவுப் பொருள்கள், பாய்கள் முதலியன கொண்டு வந்து சேர்ப்பார்கள். கூடிச் சமைப்பார்கள். சாப்பிடுவார்கள். அவர்களுடைய கிராமத்துக்கு யாராவது வந்து விட்டால், வீடு வீடாய்ப் போய் எல்லா வீட்டிலிருந்தும் சாப்பாடு கொண்டு வந்து சேர்த்துக் கொடுப்பார்கள். ஆதி காலத்தில் அவர்கள் கடல் மீனையும் காட்டுக் கிழங்குகளையுமே தின்று வந்திருக்கிறார்கள். இப்போதோ இந்தியர், ஐரோப்பியர், சைனாக்காரர் முதலிய எல்லாருடைய ஆகார வகைகளையும் உட்கொள்வதுடன் தங்கள் பழையகால ஆகாரத்தையும் உண்டு வருகின்றனர். உடுப்பு வெள்ளைக்காரர்களைப் போல உடுத்தத் தலைப்பட்டார்கள் என்றாலும் அதிலும் ஒரு தனித் தன்மையை இருக்கும்படி சற்று மாற்றித் தைத்துக் கொள்ளுகிறார்கள்.

கைவித்தியருக்கென்று பள்ளிக்கூடங்கள் தனியாக இருக்கின்றன. அவர்களுக்காக இரண்டு வித அரசாங்கங்கள் இருக்கின்றன. ஒன்று அவர்களாலேயே நடத்திக் கொள்ளப்படுகிறது. இன்னொன்று எல்லா ஜாதியினருக்கும் பொதுவான அரசாங்கமாகும். கைவித்தியர் பெரும்பாலும் கிராமங்களில் வசிக்கிறார்கள். பெரும்பாலும் கூலி வேலை செய்து பிழைப்பவர்கள். படித்தவர் பட்டணங்களிலுள்ள ஆபீஸ்களில் வேலை செய்கிறார்கள். கைவித்தியரையும் இந்தியரையும் தனித்தனி பிரித்து வைப்பதே அங்குள்ள அரசாங்கத்தின் நோக்கமாயிருக்கின்றது!

கைவித்தியர் பழைய காலத்தில் ஏதோ குருட்டு வழியான கடவுள் வழிபாடு நடத்தி வந்ததாகத் தெரிகின்றது. பீஜித் தீவிலுள்ள கவிடரா என்னும் மலை

உச்சியில் தேவர்கள் குடியிருந்ததாகவும் இறந்தவர் சுவர்க்கத்துக்குப் போகும் வழி அம்மலை உச்சி தான் என்றும், மனிதர்கள் இறந்தால் ஒரு வழியாயும், மிருகங்கள் இறந்தால் இன்னொரு வழியாயும் சுவர்க்கத்துக்குப்போகிறார்கள் என்றும் அவர்கள் விவரித்துச் சொல்லக் கேட்டு ஆச்சர்ய முற்றேன். ஆனால் அவர்களுடைய பழைய வழிபாடெல்லாம் இப்போது மறைந்து விட்டன. கைவித்தியர் முழுமையும் இப்போது கிறிஸ்துவர்களாக ஆக்கப்பட்டு விட்டனர். அவர்களில் பெரும்பான்மையோர் 'மெதாடிஸ்ட்' மிஷனைச் சேர்ந்தவர்கள். கத்தோலிக்கரும் இன்னும் பிற இனத்துக் கிறிஸ்துவர்களும் அவர்களில் உண்டு. பீஜியிலுள்ள ஊர்கள் எல்லாம் கைவித்திப் பெயர்களாலேயே வழங்கப்பட்டு வருகின்றன. அவற்றில் அநேகம் 'ராக்கி ராக்கி' என்றும், 'தாங்கி தாங்கி' 'பெலோ, பெலோ' 'சாபு, சாபு' என்றும் இரட்டைப் பெயர்களாகவே இருக்கும். இன்னும் சில 'சுவா' 'லித்தோகா' 'லம்பாசா' போன்று ஒத்தைப் பெயர்களாகவும் இருக்கின்றன.

கைவித்தியருடன் இந்தியர்கள் சிநேக பாவத்தோடு பழகுகிறார்கள் என்றாலும் விலகியே யிருக்கிறார்கள். அதற்கு இரு காரணங்கள் உண்டு. ஆட்சி முறை ஒன்று. இன்னொன்று நாகரிகத்திலும் நடை உடை பாவனையிலும் இவ்விரு வகுப்பினர்களிடையேயும் இருக்கும் வேற்றுமை. இந்தியர் வெளிநாட்டுக்குச் சென்றாலும் பண்டைக்காலந் தொட்டு வந்திருக்கும் தங்கள் நாகரிகத்தையும் நடை உடை பாவனைகளையும் விடாது கைப்பற்றி வருகின்றனர். கைவித்தியரோ பழைய நாகரிகமென்பது ஒன்றுமேயில்லாது புதிய நாகரிகத்தை மேற் கொண்டிருக்கிறார்கள். இவ்விரு வகுப்பாருக்குமிடையில் விவாகக் கலப்பு ஏற்படாத விஷயத்தைப்பற்றி ஓர் ஐரோப்பியர் இவ்வாறு கூறினார்: "இது என்ன ஆச்சரியம்! பீஜிக்கு வந்த இந்தியக் கூலிகளில் பெரும்பான்மையோர் கீழ் ஜாதியினராகத்தானே யிருப்பார்கள்? ஏனென்றால் ஏழைகள்தானே இப்படி வந்திருப்பார்கள்? நூற்றுக்குப் பதினைந்து ஸ்திரீகள்கூட உடன் வராத இவ்விந்தியர் இங்கே வந்த பிறகு எப்படித் தனியே கைவித்தியருடன் கலக்காமல் இருந்து விட்டனரோ? மனித சுபாவம் உலக இன்பத்தை அநுபவிப்பதில் எங்கும் ஒரே மாதிரிதானே யிருக்கும்? அப்படியிருக்க இவர்கள் வெளி நாட்டுக்கு வந்தும் ஜாதிப் பிரிவினை மனப்பான்மையைக் கொண்டல்லவா கைவித்திப் பெண்களைக்



கைவித்தியர்களின் நடனம்

கல்யாணம் செய்து கொள்ளாமல் இருக்கிறார்கள்? இதைக் கண்டால் உங்கள் தேசத்தில் ஜாதிப் பிரிவினையும், ஜாதிக் கொடுமைகளும் எப்படி யிருக்கும் என்பது ஒருவாறு அர்த்தமாகின்றது."

இதற்குக் கீழ்க்காணும் வண்ணம் பதில் கூறலானேன்: "ஐயா! ஜாதிப் பிரிவினை இருக்கிறது என்பதினாலேயே ஜாதிக் கொடுமைகள் இருக்க வேண்டும் என்று அர்த்தம் கொள்ள வேண்டியதில்லை. வெளி நாட்டுக்கு வந்த இந்தியரைப் பற்றி நீங்கள் தெரிவித்த விஷயம் எங்கள் தேசத்தினரைக் கௌரவிப்பது ஆகுமேயன்றி அவர்களுடைய இழிவைக் காட்டுவது ஆகாது. வெளி நாட்டுக்கு வந்த இந்தியர்கள் கல்வி யறிவில்லாதவர்களா யிருப்பினும் வந்த விடத்தில் நெறி தப்பாது யோக்கியப் பொறுப்புடன் நடந்து, தங்கள் ஜாதிக்கும் தேசத்துக்கும் மதிப்பு உயரும்படியாக நடந்து கொண்டனர் என்று அல்லவா அர்த்தம்?"

இதனை பீஜிக்கு வந்த ஐரோப்பியரின் நடத்தையுடன் சற்று ஒப்பிட்டுப் பாருங்கள். பீஜிக்கு வந்த ஐரோப்பியர் எக்காலத்திலும் நாலாயிரம், ஐயாயிரம் பேர்களை விட அதிகமாய் இருந்ததில்லை. ஆயினும் இந்தச் சிறிய தீவில்* (Half Caste) 'அரை ஜாதி' என்ற ஒரு வகுப்பினரைச் சிருஷ்டி செய்து வைத்திருப்பது அவர்களுடைய கௌரவத்தைக் காக்கின்றதா? ஏறக் குறைய ஐயாயிரம் எண்ணிக்கையுள்ள இந்த அரை ஜாதி மக்கள் உங்கள் இனத்தாரின் சொந்தக் குழந்தைகளாக இருந்தும், அவர்களைத் தூர வைத்திருப்பதும், கேவலமாய் நடத்துவதும் ஜாதி அன்பைக் காட்டுகின்றதா? அல்லது ஜாதிக் கொடுமைக்கு அடையாளமாய் இருக்கின்றதா?"

இதைக் கேட்ட அந்த ஐரோப்பியர் பெரு வியப்புற்று நின்றார். (தொடரும்)

* 'அரை ஜாதி' என்று இதுவரையும் அழைத்து வந்த பெயரை இப்பொழுது சமீப காலத்தில் 'பார்ட் யூரோப்பியன்' என்று அழைக்கிறார்கள்.

# சஞ்சலம் நீங்கியது!

**எஸ். டி. ஸ்ரீநிவாசன்**

ஹாலிலிருந்து 'கிர்...டப்...டமால்' என்ற ஒரு பேரிரைச்சல் கேட்டது. அடுத்த கணம் உரக்கப் பாடிக்கொண்டிருந்த ரேடியோவின் சத்தம் நின்றது. சமையற்கட்டில் காப்பிப் போட்டுக்கொண்டிருந்த சரளா 'திடு திப்'பென்று ரேடியோ நின்றுவிடவே, யார் அதை நிறுத்திவிட்டார்கள் என்று பார்ப்பதற்காக ஹாலுக்கு வந்தாள். அங்கு அவள் கண்ட காட்சி அவள் தேகத்தை ஒரு நிமிஷம் நடுக்கம் கொள்ளச் செய்தது.

குழந்தை பாலு வெளிறிப்போன முகத்துடன் ரேடியோவின் எதிரே நின்று கொண்டு அதை ஏதோ செய்து கொண்டிருந்தான்.

'ரேடியோவை அவன் என்ன செய்து விட்டானோ' என்ற திகிலுடன் ரேடியோ அருகில் ஓடினாள் சரளா. 'ஸ்விட்சை'ப் போட்டாள். ரேடியோ வேலை செய்ய வில்லை. விஷயத்தை ஊகிக்க அவளுக்கு அதிக நாழி யாகவில்லை. பாலு ரேடியோவை ஏதோ விஷமம் செய்து கெடுத்து விட்டான்.

உடனே அவள் கண்கள் கோவைப் பழம் போல் சிவப்பேறின. தன் ஆங்காரம் அத்தனையையும் காட்டிப் பாலுவை முதுகிலே 'பளார் பளார்' என்று நாலு அறைகள் வைத்து. "கடங்காரா! இதைக் கெடுத்துத் தொலைத்து விட்டாயே! அவன் வந்தால் இதைப் பார்த்து விட்டு என்ன ஆட்டம் ஆடப்போகிறாளோ? ஓண்ட வந்த இடத்திலே உன்னாலே பெரிய உபத்திரவம் வரும் போல இருக்கே? தரித்திரமே! என் கண் முன்னே நிற்காதே! வாசல் பக்கம் ஓடு" என்று சொல்லி விட்டு, கலங்கிய உள்ளத்துடன் மறுபடியும் சமையற்கட்டுக்குச் சென்றாள் அவள்.

குழந்தை பாலு 'விக்கி விக்கி' அழுது கொண்டு தெருப்பக்கம் போய்விட்டான்.

சரளா மனத்தில் ஒரு பெரும் பயம் புகுந்து கொண்டது. கிரிஜா வந்தால், ரேடியோ கெட்டுப்போய்க் கிடப்பதைப் பார்த்து விட்டுத் தன்னை என்ன பாடு படுத்தப் போகிறாளோ, தன்னை என்னென்னவெல்லாம் சொல்லப் போகிறாளோ என்று நடுங்கினாள்.

'நம் கணவனின் வேலையைப் போக்கியதோடு நம்மைப் பிடித்துக் கொண்ட துரதிர்ஷ்டம் நம்மை விட்டு விடக் கூடாதா? சோற்றுக்கும் துணிக்கும் கிரிஜாவை எதிர்பார்க்கும் நிலையில் நம்மை வைக்க வேண்டுமா? ...இந்த லக்ஷணத்தில் குழந்தை யில்லையே என்று யார் வருத்தப் பட்டது?...பாலு வேறு பிறந்து நம்முடன் அவனும் திண்டாட வேண்டுமா?... மறுபடியும் வேலை தேட பம்பாய்க்குத் தான் சென்றாரே அவர், அவருக்காவது சீக்கிரம் ஒரு வேலை கிடைத்து நம்மை அழைத்துப் போகக் கூடாதா!... எல்லாம் நாம் செய்த பூர்வ வினை. நாம் வாழ்ந்த வாழ்வென்ன, நாம் இருந்த இருப்பென்ன, இப்போது நாம் அடைந்துள்ள கதியென்ன? இன்று நானும் குழந்தை பாலுவும் யார் முகத்தில் விழித்தோமோ?...நிச்சயம் இன்று ஏதோ பெரிய ரகளை தான் நடக்கப் போகிறது' என்று பலபடியாக அவள் சிந்தனை சென்றது.

தெருவில் ஹாரன் சத்தம் கேட்டு அவளுடைய சிந்தனைக் கயிறு அறுந்தது. மோட்டாரின் கதவு திறந்து மூடப்படும் ஓசை கிரிஜா வந்து விட்டதை முன் கூட்டி அறிவித்தது. சரளாவின் மனம் 'திக் திக்' கென்று அடித்துக் கொண்டது.

மெதுவாக உள்ளிருந்தபடியே தெருப் பக்கம் தன் பார்வையைச் செலுத்தினாள். காரிலிருந்து இறங்கிய கிரிஜா உள்ளே வந்து கொண்டிருந்தாள்; பாலுவை அவள் தன் தோள் மேல் சாத்திக் கொண்டிருந்தாள். அவன் அழுகை இன்னும் ஓயவில்லை.

"மன்னி! ஏன் குழந்தையை இப்படிப் போட்டு அடித்தீர்கள். பாவம்! கேவிக் கேவி அழுறானே!..." என்று சரளாவைக் கேட்டுக் கொண்டே பாலுவின் தாடைகளில் பெருகியோடிக் கொண்டிருந்த கண்ணீரை மெதுவாகத் தன் புடவைத் தலைப்பால் துடைத்தாள் கிரிஜா.

"என்ன செய்தான்னு அவனையே கேளு, நீ. அவன் செய்த காரியத்துக்கு அவனை அப்படியே வெட்டிப் போடலாமே" என்று கோபத்துடன் சொன்னாள் சரளா.

"கண்ணு! ராஜா! என்னடா பண்ணினே நீ?" என்று பாலுவின் முகவாய்க் கட்டையைத் தன் வலது கையால் பிடித்துக் கொண்டு கொஞ்சலாகக் கேட்டாள் கிரிஜா.

"இல்லே, அத்தே! அந்த ரேடியோவை இப்படி அப்படித் திருப்பினேன்...அது 'டப்பு'ன்னு வெடிச்சது. அப்புறம் அது பாடலை......அதுக்கு அம்மா என்னை முதுகிலே ஓங்கிப் 'பளார் பளார்'னு அடிச்சுட்டா...." என்று கேவிக் கேவிக்

கொண்டே தன் மழலை மொழிகளால் சொன்னான் பாலு.

“நீ ஆசையோடு இந்த ரேடியோவை வாங்கி இன்னும் முழுசாகப் பத்து நாள் கூட ஆகவில்லை. அதுக்குள்ளே இந்தச் சனியன் அதைக் கெடுத்துடுத்தே... அதன் கிட்டே போகாதேடா! போகாதேடா என்று நான் எத்தனை தரம்தான் அடிச்சுக்கிறது? நாங்கள் இந்த வீட்டிலே வந்து இருக்கிறதே உனக்கு அனுவசியமான சுமை. உன் பொருள்களை வேறு இவன் உடைச்சுப் போட்டுக்கொண்டு இருந்தா, யாருக்குத் தான் மனசு பொறுக்கும்? ஒரு தரம் ‘சூடா’ இரண்டு கொடுத்தால்தான் அவனும் சொன்ன பேச்சைக் கேட்பான். அனுவசியமாக உனக்கு இன்றைக்கு ஐம்பதோ நூறோ நஷ்டம்...” என்று வருத்தம் கலந்த குரலில், மன்னிப்புக் கோரும் பாவனையில் சொன்னாள் சரஸா.

கிரிஜா ஒரு முறை குழந்தையையும், கெட்டுப் போய் மூலையில் கிடக்கும் அந்த ரேடியோவையும் பார்த்தாள். அவள் முகத்தில் பலவித உணர்ச்சிகள் மாறி மாறித் தோன்றின.

அப்படியே குழந்தையைத் தோளில் சாத்தியவாறே, ரேடியோ அருகில் சென்று அதன் பொத்தான்களை ஒன்று மாற்றி ஒன்றாக, இப்படியும் அப்படியுமாக ஒரு நிமிஷம் திருப்பினாள். அடுத்த கணம் அவள் சரஸாவை நோக்கி மெதுவாக நடந்து வந்தாள்.

“மன்னி! விளையாட்டுப் புத்தியிலே அவன் அதை ஏதோ செய்திருக்கிறான். அது நின்று போச்சு. ஏதாவது சின்ன ரிப்பேர்தான் இருக்கும். இதுக்காக முகம் சிவக்கும்படி அவனை அடித்து விட்டீர்களே! மன்னி! பிறக்க மாட்டாத குழந்தை. பாவம்! இதோ பாருங்கோ! இன்னும் அவன் விக்கல் ஓயவில்லையே...” என்று சொல்லிவிட்டுக் குழந்தையைப் பார்த்து, “பாலு! நீ அழாதே, நான் உன்னை மோட்டாரிலே கடைக்கு அழைச்சிண்டு போகிறேன். அந்த ரேடியோ போனாப் போறது. அதை நாம் ரிப்பேர் பண்ணிக் கொள்ளலாம்” என்று கூறி அவனைச் சமாதானப் படுத்திக்கொண்டே தெருவுக்கு எடுத்துச் சென்றாள். கிரிஜாவும் பாலுவும் மோட்டாரில் ஏறிக் கொண்டனர்.

தான் எதிர்பார்த்தது என்ன, தன் கண் முன் நடப்பது என்ன என்று சரஸா அதிசயத்துடன் பார்த்துக் கொண்டே இருக்கையில், மோட்டார் அங்கிருந்து கிளம்பி விட்டது. கிரிஜாவின் செய்கையை நினைக்க நினைக்கச் சரஸாவுக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை.

இதைத் தொடர்ந்தாற் போல் பல வருஷங்களுக்கு முன்பு நடந்த ஒரு சம்பவம் அவள் ஞாபகத்துக்கு வந்தது.

## 2

கிரிஜாவும் சரஸாவின் கணவன் வாஸுவும் மூத்தாள் இளையாள் குழந்தைகள். தன் கல்யாணத்தின் போது பார்த்தது தான் கிரிஜாவை. அதற்குப் பிறகு வெகு நாள் வரை—சரஸா தன் கணவனுடன் குடித்தனம் செய்ய வந்து மூன்று வருஷங்கள் வரை—கிரிஜா சரஸாவின் வீட்டுக்கு வரவே இல்லை. கிரிஜா தன் கணவனுடன் திருச்சியில் வசித்து வந்தாள்.

1942 ஆம் வருஷம். நாட்டில் ஒரு பெரிய கொந்தளிப்பு. அந்நிய ஆட்சியை எதிர்த்து ஒரு பெரும் போராட்டம் நடந்து கொண்டிருந்தது.

ஒரு நாள் திடுமென கிரிஜா தன் இரண்டு வயதுக் குழந்தையை எடுத்துக் கொண்டு வாஸுவின் வீட்டுக்கு வந்தாள். வாஸுவுக்கு விவரம் ஒன்றும் புரியவில்லை. விசாரித்ததில் கிரிஜாவின் கணவன்—ரங்கராஜன் — ஆங்கில அரசாங்கத்துக்கு விரோதமாக ஏதோ நடவடிக்கையில் ஈடுபட்டிருந்தான் என்ற காரணத்துக்காகப் போலீஸார் பிடித்துக் கொண்டு போய்ச் சிறையில் அடைத்து விட்டனர் என்றும் தன்னைக் காப்பாற்ற வேறு ஒருவரும் இல்லாததால் கிரிஜா குழந்தையுடன் சென்னைக்கு வந்து விட்டதாகவும் அவள்

---




கண் வைத்தியர் (நோயாளியைப் பார்த்து):—இதோ, சுவரில் எழுதியிருப்பதைப் படியும், பார்க்கலாம்.

நோயாளி:—முடியவில்லையே?

கண் வைத்தியர்:- என்ன ஐயா, இது? வேடிக்கையாயிருக்கிறதே! இவ்வளவு பக்கத்தில் இருந்துமா உங்களுக்குக் கண் தெரியவில்லை?

நோயாளி:—எனக்குக் கண் தெரிகிறது. இங்கிலீஷ்தான் தெரியாது!

தெரிந்து கொண்டாள். வாஸு அவளை அன்புடன்தான் வரவேற்றான். ஆனால் சரஸாவுக்கு அவள் தங்கள் வீட்டில் வந்து தங்கியிருப்பது கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை.

இதன் காரணமாக, கணவன் மனைவி இருவருக்குள்ளும் அடிக்கடி பூசல்கள் ஏற்பட்டன. சரஸா மறைமுகமாகக் கிரிஜாவைத் திட்டவும் ஏசிக் காட்டவும் செய்தாள். சொந்தத் தங்கையையே இந்த காலில் யாரும் வைத்துக் கொண்டு காப்பாற்ற மாட்டார்கள். சிறிய தாயார் பெண்ணை எதற்காகத் தங்கள் வீட்டில் அழைத்து மாதக் கணக்கில் வைத்துக் கொண்டிருக்க வேண்டும் என்பதுதான் அவள் வாதம்.

ஆனால் கிரிஜா பொறுமைசாலி. தன் தலையெழுத்தை நினைத்துச் சரஸாவின் கொடுமைகளையெல்லாம் பொறுத்துக் கொண்டிருந்தாள்.

ஒரு நாள் சரஸா காலண்டரில் அன்றைய பால் கணக்கை எழுதிவிட்டுப் பென்சிலை மறந்தாற்போல் மேஜையின் மீது வைத்து விட்டுப் போய்விட்டாள்.

சில நிமிஷங்களுக்கெல்லாம் அங்கே வந்த கிரிஜாவின் குழந்தை—ராஜு—அந்தப் பென்சிலை எடுத்துத் தரையில் ஏதோ கிறுக்க ஆரம்பித்தான். பென்சிலின் முனை உடைந்து விட்டது. இதைப் பார்த்துக் கொண்டே வந்த சரஸாவுக்குத் தன் அகங்காரத்தை வெளிக் காட்ட ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது.



பெண்:—அப்பா, நான் அவரிடம் கோபித்துக்கொண்டு வந்து விட்டேன். அம்மா எங்கே?

தகப்பனார்:—அவள் என்னிடம் கோபித்துக்கொண்டு பிறந்தகம் போய் விட்டாள்!

“தண்டச் சோறு தின்னுவிட்டு உடம்பு வெறுமனே இருக்க மாட்டேங்கிறது போல இருக்கு. மேஜைமேலே இருக்கிற சாமானை யெல்லாம் எடுப்பானேன்? பின்னை இல்லாத வீட்டுச் சொத்தா இதைப் பாழடிக்கிறத்துக்கு.........ஏய் ராஜு! ஏண்டா எடுத்தே அந்தப் பென்சிலை?” என்று இரைந்து கொண்டே அவன் முதுகின் மேல் ஒரு அறை கொடுத்து, அந்தப் பென்சிலைப் பிடுங்கி மேஜையறையினுள் வைத்தாள். தூரத்தில் இருந்து இதைப் பார்த்துக் கொண்டே இருந்த கிரிஜாவின் நெஞ்சு அடித்தது. அவள் பொறுமை எல்லை மீறிப் போயிற்று. “மன்னி! ராஜு என்ன அப்படிப்பட்ட பெரிய தப்பைப் பண்ணி விட்டான். அவனைப் போட்டு முதுகு விரியும்படியாக அடிச்சுட்டேளே!” என்று கேட்டுக் கொண்டே, அழுது கொண்டே தன்னை நோக்கி ஓடிவந்த ராஜுவை அவள் இடுப்பில் தூக்கி வைத்துக் கொண்டாள்.

அவ்வளவுதான். சரஸா ‘பிலு பிலு’ வென்று பிடித்துக் கொண்டாள். கிரிஜாவையும், ராஜுவையும் திட்டித் தீர்த்து விட்டாள்.

அவள் சொல்லிய ஒவ்வொரு வார்த்தையும் கிரிஜாவின் மனத்தில் ஆயிரம் ஈட்டிகள் கொண்டு குத்துவது போல் இருந்தன.

ஆனால் தன் துரதிர்ஷ்டத்தை நினைத்து அழுவதைத் தவிர கிரிஜாவால் அப்போது ஒன்றும் செய்ய முடியவில்லை.

* * *

நாட்கள் ஓடின. நாட்டில் எழுந்த அரசியல் கொந்தளிப்பு ஒருவிதமாக அடங்கியது. காங்கிரஸ் காரர்கள் எல்லோரும் விடுவிக்கப்பட்டனர். ரங்கராஜுவும் விடுதலை செய்யப்பட்டான். ‘செய்தி இலாகாவில்’ அவனுக்கு ஒரு உயர்ந்த உத்தியோகமும் கிடைத்தது. அவன் கிரிஜாவையும், ராஜுவையும் அழைத்துக் கொண்டு போய்விட்டான்.

கிரிஜா தன் கலி தீர்ந்ததாகச் சந்தோஷப்பட்டாள்; சரஸா ஒரு அனாவசியச் சுமை தங்களை விட்டு நீங்கியதாக மகிழ்ச்சி அடைந்தாள். இதன் மத்தியில்தான் அவளுக்குப் பாலு பிறந்தான்.

அதிர்ஷ்ட சக்கரம் சுழன்றது. அவரவரின் ஸ்தானம் மாறியது.

வாஸு உத்தியோகம் வகித்து வந்த கம்பெனிக்கு அதிக நஷ்டம் வந்து விட்டதால் அதைத் திடீரென்று சாத்திவிட்டார்கள். வாஸு வேலையை இழந்தான்; குடும்பத்தைக் காப்பாற்ற முடியாத நிலையை அடைந்தான் அவன்.

இவ் விஷயத்தை அறிந்ததும் அண்ணன் வீட்டிற்கு ஓடி வந்தாள் கிரிஜா. மறுபடியும் அவனுக்கு வேலை கிடைக்கும் வரையில் சரஸா, பாலு எல்லோரையும் அழைத்துக் கொண்டு வந்து தன் வீட்டில் வந்திருக்கும்படி சொன்னாள். ஆனால் வாஸு தான் பம்பாய் சென்று அங்கு ஒரு நல்ல வேலைக்குப் பிரயத்தனம் செய்யப் போவதாகச் சொன்னான். அவனுக்குப் பம்பாயில் வேலை கிடைக்கும்வரையில் சரஸாவையும், பாலுவையுமாவது தன் வீட்டுக்கு அனுப்பி வைக்கும்படி அண்ணனிடம் கெஞ்சினாள். அவனும் அதற்கு இசைந்தான்; தன்னைக் காப்பாற்ற வேறு யாரும் இல்லாததால் சரஸாவும் அந்த ஏற்பாட்டுக்கு அரைகுறை மனத்துடன் தலையாட்ட வேண்டியதாயிற்று.

3

நான் அன்று, ராஜு பென்சிலின் நுனியை உடைத்தபோது நடந்து கொண்ட விதத்தையும், இன்று பாலு ரேடியோ உடைத்துவிட்ட செய்தி கேட்டு கிரிஜா நடந்து கொண்ட விதத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தாள் சரஸா. இரண்டுக்கும் எவ்வளவு வித்தியாசம்!

தெருவில் மோட்டார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது. பாலு 'குடு குடு' என்று சமையற் கட்டுக்கு ஓடிவந்தான். அவன் ஒரு புது நிஜாரும் ஒரு புது சில்க் சட்டையும் அணிந்திருந்தான். கையில் ஒரு ஊதல், ஒரு பந்து, ஒரு 'பந்தடிக்கும் மட்டை' எல்லாம் வைத்துக் கொண்டிருந்தான்.

"அம்மா! அம்மா! இந்தச் சட்டை, நிஜார் பந்து எல்லாம் அத்தை வாங்கிக் கொடுத்தா" என்று சொல்லிக் கொண்டே சந்தோஷத்தால் குதித்தான் அவன்.

அதே சமயத்தில் ஒரு பெரிய பொட்டலத்துடன் உள்ளே நுழைந்த கிரிஜா அதைப் பிரித்துக் கொண்டே, "மன்னி! இதோ பாருங்கோ! இந்தப் புடவை உங்களுக்குப் பிடிச்சிருக்கா. நவராத்திரி வருகிறதே, எங்கேயாவது மஞ்சள் குங்குமத்துக்குப் போகிறதானால் உங்களுக்கு ஒரு நல்ல புடவையாக இருக்கட்டும் என்று இதை வாங்கிக் கொண்டு வந்தேன்..." என்றாள்.

சரஸா புடவையை உற்றுப் பார்த்தாள். அது நல்ல பட்டுப் புடவை: விலை 175 ரூபாய் என்று அதில் போட்டிருந்தது.

கிரிஜாவின் பெருந்தன்மைதான் என்ன! சரஸாவின் மனத்தில் ஒரு விநோத உணர்ச்சி எழுந்தது; கிரிஜா ஒரு தெய்வம் என்ற முடிவுக்கு வந்தாள் அவள்.

சட்டென்று கிரிஜாவின் கைகளைப் பிடித்துக் கொண்டாள் சரஸா.



குடுமிக்காரர் :—அவர் நம்ம ஊர்ப் பிள்ளையாண்டான்தான்! இங்கிலீஷ் வெள்ளைக்காரர் மாதிரியே பேசுவார்!

குடை ஆசாமி :—அப்படியா?

குடுமிக்காரர் :—அது ஒரு அதிசயம் இல்லை! அவர் தமிழைக் கூட வெள்ளைக்காரர் மாதிரியே பேசுவார்!

---

"கிரிஜா! உன் பெருந்தன்மை தெரியாமல், நீ எங்கள் வீட்டில் இருந்தபோது உன் மனசை ரொம்ப தூரம் நோகப் பண்ணி விட்டேன். உன் குழந்தையைக் கூட ஒருநாள் கண்டபடி அடித்துவிட்டேன். நான் அப்போது உன்னைப் படுத்தி வைத்ததற்கெல்லாம் என்னை மன்னித்துவிடு" என்று கூறினாள்.

"மன்னி! உங்களைப் பற்றி நான் எப்போதும் தவறாக நினைத்ததேயில்லை. அந்த மூன்று வருஷ காலம் நீங்கள் ஆதரவற்றிருந்த என்னை வைத்துக் கொண்டு காப்பாற்றினதே பெரிய உபகாரம் இல்லையா? அதை நான் என்றைக்கும் மறக்கவே மாட்டேன். நான் இப்போ செய்கிறதெல்லாம் கூட அதற்கு ஈடாகாது......... அழாதீர்கள். இன்றைக்கு வெள்ளிக்கிழமை. மஞ்சள் தடவி இந்தப் புடவையைக் கட்டிக் கொள்ளுங்கள்! சீக்கிரத்திலே அண்ணாவுக்கும் நல்ல உத்தியோகம் கிடைக்கட்டும்......" என்று சொல்லிக் கொண்டே அந்தப் புடவையைச் சரஸாவின் கையில் வைத்தாள் கிரிஜா. சரஸாவின் முகத்தில் சஞ்சலத்தின் சாயை நீங்கி, அமைதியின் அடையாளம் தோன்றியது.

REGD. NO. M. 4392